சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 ஜூன் : 2003 புன்னகை : 4



இந்தியப் புராதனக் கதைகள்

25



நவீன வேதாளக் கதை

19



மர்மக்குளம்

13



விநாயகர்

45

## பொருளடக்கம்





SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/-
இந்தியாவிற்குள் ரூ.120/-
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
**சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# கனவை உறுதிப்படுத்துவோம்

உங்கள் தம்பி, தங்கைகளை மகிழ்விக்க எமது 'ஜூனியர் சந்தமாமா' ஆரம்பிக்கப்பட்டு வெளியாவதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஆம், இது புதிய எண்ணங்களைக் கொண்ட ஒரு துணிகர முயற்சி. சிறார்களுக்கு அவர்கள் விரும்பும் கட்டுரைகளையும் படங்களையும் அளித்து அவற்றின் வாயிலாக நம் பண்டையப் பெருமையை உணர்த்தச் செய்வதே இம்முயற்சி. இதற்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்களைக் கொண்டு இது உருவாக்கப்படுகிறது.

இம்முயற்சிக்கு மேலும் ஊக்கமளிக்கும் மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சி இந்தப் பிரசுரத்தின் முதலாவது பிரதியை ஏப்ரல் 10ல் நம் குடியரசுத் தலைவர் திரு. ஏ.பி.ஜே. அப்துல் கலாம் அவர்கள் பெற்றுப் பெருமை அளித்த போதுதான். அவர் மனநிறைவுடன் இதனை வாழ்த்தி இது சிறார்களுக்கு மிகவும் தேவையானது என்று நவின்றார். இச்சமயத்தில் அவர் கனவைப் பற்றிக் கூறியது எம்மை மிகவும் நெகிழ்த்தியது. சிறார்கள் வரும் காலம் பற்றிச் சிந்தித்துக் கனவு காண்பதோடு அதை நனவாக்கித் துணிவுடன் பொறுமையாகச் செயல்பட்டு நாட்டை எத்துறையிலும் வளமாக்கி முன்னேறச் செய்ய வேண்டும்.

இந்த அறிவுரையை அந்தரங்க சுத்தியுடன் ஏற்று அதன்படி நடப்போம். வருங்கால வாழ்வை அமைக்க உரிய கனவை நாம் கண்டு ஒன்றுபட்டுச் செயல்பட்டாலே நம் நாட்டில் ஒவ்வொருவரும் சுக வாழ்வை அடைய முடியும்.



Visit us at : http://www.chandamama.org
ஆசிரியர் : விஸ்வம்

இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள் – 21

நம் நாடு சாஸ்திரீய சங்கீதத்தில் வளம் பெற்றுள்ளது. இங்கு சில இசை மேதைகளைப் பற்றிய வினாக்கள் உள்ளன. விடைகளை நீங்கள் அறிவீர்களா?

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*

**1** கர்நாடக இசை மும்மூர்த்திகளில் இளையவனான, ஆரம்பத்தில் வீணை வித்வானான நான் மேற்கத்திய இசையில் சமஸ்கிருத பாடல்களை அமைத்துள்ளேன். நான் யார்?

---

**2** திருவாங்கூர் மன்னனான நான் கர்நாடக, இந்துஸ்தானி பாணியில் பாடல்களை இயற்றியுள்ளேன். நான் யார்?

---

**3** நான் 'துருபத்' பாடுவதில் புகழ் பெற்றவன். நான் குவாலியர் மன்னர் ராஜாமான்சிங் தோமாரின் ஆஸ்தான இசைக் கலைஞன். நான் யார்?

---

**4** நான் பக்தி மார்க்கக் கவி *(1484 - 1564)* நான் 4,75,000 பக்திப் பாடல்களை இயற்றியுள்ளேன். நான் யார்?

---

**5** நான் 1424லிருந்து 1503 வரை வாழ்ந்தவன். திருப்பதி வெங்கடேஸ்வரர் பற்றி 32,000 பாடல்களை இயற்றியவன். நான் யார்?

---



ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஜவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ..............................

..............................

..............................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது ............ வகுப்பு: ..............................

முகவரி: ..............................

..............................

பின்கோடு: ............ போன்: ..............................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி – 21**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஜூலை 5, 2003

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





# FIRST COPY FOR THE FIRST CITIZEN



April 10, 2003, was a red-letter day for **Chandamama**, when the First copy of the first issue of ***Junior Chandamama*** was presented to His Excellency **Dr. A.P.J. Abdul Kalam**, President of India, who has endeared himself as a trusted friend of the children of India. He graciously accepted the magazine from the publishers who had called on him that evening. He was very appreciative of the publication and blessed the bold venture, launched after providing healthy reading for children for 56 years.



# நல்லவன் வருவானே!

மணலூரில் கந்தசாமியும் வீராசாமியும் அடுத்தடுத்த வீட்டுக்காரர்கள். இருவரும் பெரும் பணக்காரர்கள். அதனால் ஒருவர் மற்றவருக்குச் சளைத்தவர் அல்ல என்பதை நிலைநாட்ட அற்ப விஷயங்களுக்கு எல்லாம் அவர்கள் சண்டை போட்டுக் கொண்டே இருந்தார்கள். இதற்கு ஒரு முடிவு வராதா என்று இருவருமே யோசித்துக் கொண்டும் இருந்தார்கள்.

அதே ஊரில் நல்ல பகுதியில் ஒரு பெரிய வீடு விலைக்கு வருவதைக் கேள்விப்பட்டு வீராசாமி அதை வாங்கிவிட்டான். பிறகு தன் வீட்டை அவன் வேறொருவருக்கும் விற்றுவிட்டான்.

வீராசாமி தன் சாமான்களை எல்லாம் வண்டியில் ஏற்றிப் புதிய வீட்டிற்கு அனுப்பிவிட்டுக் கந்தசாமியைக் கண்டு ''நான் புதிய வீட்டிற்குப் போகிறேன். அங்கு என் பக்கத்து வீட்டுக்காரர். மிகவும் நல்லவர். இனிமேல் உன் தொல்லை எனக்கு இராது,'' என்றான்.

அப்போது கந்தசாமி, ''என் பக்கத்து வீட்டுக்காரரும் நல்லவரே!'' எனவே, வீராசாமி ''ஓஹோ! நீ வேறு ஊரில் வீடு வாங்கிவிட்டாயா? அங்கே போய்விடப் போகிறாயா?'' என்று கேட்டான்.

கந்தசாமியும் ''எனக்கு என்ன தலைவிதியா இந்த வீட்டைவிட்டுப் போக? ராஜா போல சுகமாகக் காலம் கழிப்பேன். அடுத்த வீட்டிற்கு வருபவன் உன்னைவிட நல்லவனாக இருப்பான். ஏனென்றால் இந்த உலகில் உன்னைவிட மோசமானவன் இல்லவே இல்லையே!'' என்றான் குத்தலாக.





# நீயா அழகன்!

மேட்டுப்பாளையத்தில் முனியப்பன் என்ற விவசாயிக்கு பொன்னையன், சின்னைய்யன் என்ற இரு மகன்கள் இருந்தார்கள். சிறுவயதில் பொன்னைய்யனின் முகத்தில் கொதி நீர் விழவே கொப்புளங்கள் ஏற்பட்டு அவை குணமடைந்தன. ஆனால் முகத்தில் வடுக்கள் ஏற்பட்டு அவன் பார்க்க விகாரமாக இருந்தான். அவனது தம்பி சின்னைய்யன் நல்ல அழகனே. அதனால் அவன் கர்வம் கொண்டு யாரையும் லட்சியம் செய்யாமல் இருந்து வந்தான்.

தினமும் முனியப்பன் தனக்குள்ள சிறிய நிலத்தில் விவசாய வேலைகளைக் கவனித்து வந்ததோடு ஆடு, மாடுகளை மேய்க்க விட்டும் வந்தான். அவனது இரு மகன்களும் அவனோடு வயலுக்குச் சென்றாலும் பொன்னைய்யன்தான் சுறுசுறுப்பாக வேலைகளைச் செய்து வந்தான். சின்னைய்யனோ ஒரு வேலையும் செய்யாமல் வயலில் ஒரு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டே இருந்து வந்தான். முனியப்பனும் சின்னைய்யனைக் கண்டிக்காமல் அவன் போக்கிலேயே போக விட்டுவிட்டான்.

இப்படியே வருடங்கள் உருண்டன. முனியப்பன் கவலை எல்லாம் பொன்னைய்யனைப் பற்றியதுதான். அழகனான சின்னைய்யனை எந்தப் பெண்ணும் மணக்கத். தயாராக இருப்பாள். ஆனால் விகாரமான பொன்னைய்யனுக்குத் திருமணம் நடக்குமா என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஒருநாள் முனியப்பனைக் கண்டு பேச கல்யாணத் தரகர் கனகரத்தினம் அவனது வயலுக்கு வந்தான். வயலில் முதலில் அவன் கண்டது தனியாக உட்கார்ந்திருக்கும் சின்னைய்யனைத்தான். கல்யாணத் தரகனைக் கண்டதும் சின்னைய்யன் அவனைத் தன்னருகே அழைத்து ''கனகு!

- சிவனார் செல்வன் -



எங்கள் திருமணம் பற்றித்தானே என் தந்தையிடம் பேச வந்திருக்கிறாய். அழகனான எனக்கு எந்தப் பணக் காரனும் தன் பெண்ணைக் கொடுக்கச் சம்மதித்துவிடுவான். ஆனால் என் அண்ணன் பொன்னையனுக்குத் தான் யாரும் தன் மகளைக் கொடுக்க விரும்பமாட்டார்கள். எப்படியாவது ஒரு பெண்ணைப் பிடித்து முதலில் அவனுக்குக் கட்டி வை. அவள் முடமானாலும் நொண்டியானாலும் பரவாயில்லை. அவன் திருமணம் நடந்தால்தானே என் திருமணம் நடக்கும்,'' என்று சொன்னான்.

தரகனும், ''பார்க்கிறேன். ஆனால் நீ நினைப்பது போல எந்தப் பெண் ணும் உன்னை மணந்து கொள்ள விரும்பிவிட மாட்டாள்,'' என்று கூறி விட்டு முனியப்பனைக் காணச் சென்றான். முனியப்பனும் அவ னைக் கண்டதும் ''வாப்பா கனகு! என் மகன் பொன்னையனுக்கு ஏதாவது நல்ல செய்தி கொண்டு வந்திருக்கிறாயா?'' என்று ஆவ லுடன் கேட்டான்.

கனகரத்தினமும், ''ஆமாம். ஒரு சம்பந்தம் கிடைக்கும் போலிருக் கிறது. நீ நாகலூருக்குப் போய் அங்கு வேலுசாமி என்பவனைப் பார். அவ னது மகள் மல்லிகா அழகானவள். ஒரு வேளை பொன்னையனுக்கு அந்த இடம் அமைந்தாலும் அமைய லாம். நீ வேலுசாமியைக் கண்டு பேசிப் பார்!'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

முனியப்பன் மனதில் பொன் னையனுக்கும் ஒரு வழி பிறந்து விட்டது என்று மகிழ்ச்சி ஏற்பட்டது. அவன் மறுநாளே நாகலூருக்குப் போய் வேலுசாமியின் வீட்டை அடைந்தான். வேலுசாமியும் முனி யப்பனை வரவேற்று அவன் வந்த காரணத்தைக் கேட்டு அறிந்து கொண்டான்.

அப்போது அவன் ''உங்களிடம் என்னைப் பற்றிய முழு விவரங் களைத் தெரிவிக்கிறேன். என் மக ளுக்கு இதுவரை திருமணம் நடக் காமல் இருப்பதற்கு நான்தான் காரணம். நான் ஏழை. இளம்பருவத் தில் குடும்பத்தை நடத்த சிரமப் பட்டதால் ஒரு பணக்காரன் வீட்டில் திருடி அகப்பட்டு அரசாங்க தண் டனை பெற்று சிறையில் அடைக்கப் பட்டேன். தண்டனைக் காலம்

முடிந்ததும் விடுதலையாகி வந்ததும் பலரிடம் வேலை கேட்டேன். எல்லோருமே ஒரு திருடனுக்கு வேலை தர முடியாது என்று கூறிவிட்டார்கள். அதனால் வேலை கிடைக்காமல் வருமானம் இல்லாது என் குடும்பம் சிரமப்பட்டது. அதனால் மறுபடியும் திருடத் தீர்மானித்து அதே பணக்காரர் வீட்டிற்குத் திருடச் சென்றேன். அப்போது அவரது ஆட்கள் என்னைப் பிடித்துவிட்டார்கள்,'' என்று சொல்லி நிறுத்தினான்.

பிறகு அவன், ''அந்தப் பணக்காரர் என்னை காவலதிகாரியிடம் ஒப்படைக்கவில்லை. என்னைப் பற்றி விசாரித்து 'சரி, நீ நல்லவனாக இருக்க விரும்புகிறாய். உனக்கு நான் வேலை கொடுக்கிறேன். என் தோட்டத்தில் வேலை செய்!' என்று கூறி வேலையும் கொடுத்தார். நானும் வஞ்சனை இல்லாமல் உழைத்து வேலை செய்கிறேன். என் மகள் மல்லிகா மிகவும் அழகானவளே. ஆனால் ஒரு திருடனின் மகள் என்று கூறி அவளை ஏற்க மறுக்கிறார்கள்,'' என்றான் பெருமூச்சு விட்டவாறே.

முனியப்பனும், ''நீங்கள் எதையும் மறைக்காமல் கூறியது நல்லதே. நானும் என் மூத்த மகன் பொன்னையனுக்குப் பெண் பார்க்க வந்தேன். சிறுவயதில் அவனது முகத்தில் கொதிநீர் விழுந்து கொப்புளங்களாகி அவை ஆறி தழும்புகள் ஏற்பட்டன. அதனால் அவனது முகம் விகாரமாகி விட்டது. உங்களது மகளைப் பார்த்தேன். அவள் மிக அழகாக இருக்கிறாள். இப்படி அழகாக உள்ளவளை என் மூத்த மகனுக்குத் திருமணம்



செய்து வைப்பதைவிட என் இளைய மகன் சின்னைய்யனுக்குக் கொடுப் பதே ஏற்றது என நினைக்கிறேன். அவன் மிகவும் அழகானவன். நான் இருவரையும் அழைத்து வருகிறேன். உங்கள் மகள் மல்லிகா அவர்களைப் பார்த்து முடிவு செய்யட்டும்,'' என்று கூறி மறுபடியும் வருவதாகச் சொல்லி விட்டுச் சென்றான்.

மறுவாரமே முனியப்பன் தன் இரு மகன்களையும் அழைத்துக் கொண்டு நாகலூரில் வேலுசாமியின் வீட்டிற்குச் சென்றான். மல்லிகா வைப் பார்த்துவிட்டு பொன்னைய் யன் எதுவும் கூறவில்லை. சின் னைய்யனோ, ''இவள் அழகாக இருக் கிறாள். இவளைவிட அழகாக உள்ள என்னை இவள் கண்டிப்பாக மணக் கவே விரும்புவாள்,'' என்றான் சிரித்தவாறே.

அப்போது முனியப்பன், ''இவ ளது தந்தை வேலுசாமி முன்பு திருடனாக இருந்து தண்டனை பெற் றவன்,'' எனவே, சின்னைய்யன் ''இதை ஏன் முன்பே என்னிடம் கூற வில்லை? ஒரு திருடனின் மகளை மணக்க நான் தயாராக இல்லை,'' என்று கோபத்தில் கத்தினான்.

அப்போது மல்லிகா குறுக்கிட்டு, ''இவனா அழகன்? பார்க்க அழகாக இருந்தால் போதுமா? மனம் விகார மாக இருக்கிறதே! பண்பு தெரியாது பிறர் மனம் புண்படப் பேசும் இவனை மணக்க நான் தயாராக இல்லை. தரகர் கனகு கூறியது போல இவரது அண்ணன் முகம் விகாரமாக இருந்தாலும் மனம் நன்றாகவே உள்ளது. அமைதியாய் அடக்கமாய் பண்போடு நடந்து கொள்கிறார். புற அழகைவிட நான் அக அழகைத் தான் விரும்புகிறேன். அவருக்கு விருப்பம் இருந்தால் அவரையே நான் மணக் கிறேன்,'' என்றாள்.

பொன்னைய்யனும் தான் மல்லி காவை மணக்க விரும்புவதாகத் தெரிவிக்கவே, விரைவில் அவர்களது திருமணம் நடந்தது. அப்போதுதான் சின்னைய்யனுக்கு தான் அழகனாக இருந்தால் எந்தப் பெண்ணும் தன்னை மணக்கச் சம்மதித்துவிடு வாள் என்ற நினைப்பு தவறு என்பது தெரிந்தது.





# மர்மக் குளம்

## 16

*(வானத்தில் அன்ன ரதத்தில் பயணம் செய்து கொண்டிருந்த மர்மக்குள மகேஸ்வரன் அதிலிருந்து நிலை தடுமாறிக் கீழே விழுந்தான். அவன் விழுந்ததும் மனித மாமிசத்தை உண்ணும் காடர்களின் மத்தியில் தான். அவர்களிடமிருந்து தப்ப அவன் அவர்களிடம் தன்னோடு வந்தவர்களைக் காட்டுவதாகக் கூறி ஆசை காட்டினான். எல்லோருமாக அவர்களைப் பிடிக்கக் கிளம்பினார்கள். அப்போது சித்தசாதகன் கத்தியது அவர்களுக்குக் கேட்டது. அதன் பிறகு - )*

சித்தசாதகன் 'ஜெய் மகாகாளி' எனக் கத்தியது கேட்டு மகேஸ்வரன் மலைத்து நின்றான். அதைக் கண்ட பூசாரி ஆச்சரியப்பட்டான். அவர்களோடு வந்த காடர்களில் நால்வர் தம் ஈட்டிகளை உயர்த்திக் கொண்டு அந்தக் குரல் வந்த இடத்திற்கு ஓடினார்கள்.

அப்போது மகேஸ்வரன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு பூசாரியிடம், ''இப்போது போன நால்வரை நீ திரும்பி வரச் சொல். அந்தக் குரல் கொடுத்தவன் மகாகாளி பக்தன். அவனது மந்திர சக்திக்கு முன் உங்கள் ஈட்டிகள் பயனற்றுப் போய்விடும்,'' என்றான்.

அதைக் கேட்டு பூசாரி கேலியாகச் சிரித்தான். பிறகு ''நாங்கள் இந்த மந்திர சக்திக்கு எல்லாம் பயந்துவிட மாட்டோம். எங்கள் ஆண்டவன் எங்கள் மீது கருணை கூர்ந்து இன்னொரு மனிதனையும் அனுப்பி



இருக்கிறார்,'' என்று கொக்கரித்தான். பூசாரி இவ்வாறு சொல்லி முடிக் கையில் ஈட்டிகளை உயர்த்திக் கொண்டு போன நான்கு காடர்களும் 'ஐயோ! அப்பா!!' [redacted] அலறிக் கொண்டு வந்து பூசாரியின் காலடியில் விழுந்தார்கள்.

பூசாரியும் அவர்களை எழுப்பி ''என்ன விஷயம்?'' என்று கேட் டான். அப்போது ஒரு காடன், ''யாரோ ஒருவன் எமனைப் போல முரடான ஒரு மனிதக் குரங்கின் மீது உட்கார்ந்து கொண்டு நம்மைத் தாக்க வந்து கொண்டிருக்கிறான்,'' என் றான். அதைக் கேட்டு பூசாரியின் கை, கால்கள் நடுங்கின. தொலைவில் சித்தசாதகன் ஈட்டியை உயர்த்திய வாறே மனிதக் குரங்கின் மீது உட்கார்ந்து வந்து கொண்டிருப்பதை அவன் பார்த்தான்.

பூசாரியும், ''ஆமாம். எமன் போல வருகிறானே. நாம் இங்கிருந்து ஓடி விடுவது தான் நல்லது. ஒருவன் ஓடிப்போய் தலைவன் காட்டானிடம் விஷயத்தைச் சொல்லி அவனை அழைத்து வரட்டும். இவன் கையில் அகப்பட்டால் நாம் எமலோகத் திற்குத் தான் போக வேண்டிவரும்,'' என்றான்.

இதே சமயத்தில் சித்தசாதகன் மீண்டும் ''ஜெய் மகாகாளி!'' என்று உரக்கக் கூவினான். பிறகு அவன் மனிதக் குரங்கோடு காடர்களின் முன் நின்று ''யாராவது நகர்ந்தால் நேராக எமலோகத்திற்குத் தான் போவீர்கள். நீங்களெல்லாம் யார்? ஓர் அரசகுமாரி ஆகாயத்திலிருந்து இங்கு எங்கேயோ விழுந்திருக்கிறாள். அவளைப் பார்த் தீர்களா?'' என்று கேட்டான்.

சித்தசாதகன் கூறியது பூசாரிக்கும் காடர்களுக்கும் புரியவில்லை. பூசாரி மகேஸ்வரன் எங்கே என்று பார்த் தான். அவன் ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்டு சித்தசாதகனுக்கு அவனைச் சுட்டிக் காட்டி ''அவனை எம் ஆலமரத்து ஆண்டவன் எங்களுக்கு உணவாக அனுப்பி இருக்கிறான். அவனிடம் நீ குறிப்பிடும் அரசகுமாரியைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்,'' என்றான்.

அதுவரை காடர்களையே பார்த் துக் கொண்டிருந்த சித்தசாதகன் பூசாரி காட்டிய மரத்தைப் பார்த்தான். உடனே அவன் ''அடடே! தொப்பிக் காரப் பயலா நீ? நீதான் மர்மக்குள மகேஸ்வரனா! திருடன் மாதிரி ஓடவா பார்க்கிறாய்? நீ ஓரடி எடுத்து

வைத்தால்கூட என் ஈட்டி உன்னைப் பதம் பார்த்துவிடும், தெரிந்ததா?'' என்று உறுமினான். அதைக் கேட்ட மகேஸ்வரன் கோபமாய், ''அடே! உனக்குச் சரிசமமாகப் பேச நான் தயாராக இல்லை. பேசாமல் உன் வழியைப் பார்த்துக்கொண்டு போ!'' என்று கர்வமாகக் கூறினான்.

சித்தசாதகனோ, ''அடே! நான் யார் தெரியுமா? தேவி மகாகாளியின் பக்தன். உன் போன்றவன் எனக்கு அடிமையாக இருப்பவன். அவனை அரசகுமாரி காஞ்சனமாலையைத் தேடிக் கண்டுபிடித்துக் கூட்டிக் கொண்டுவர நான் அனுப்பி இருக்கிறேன். ஏய் ஜலவிருகா! எங்கே இருக்கிறாய்? வந்து உன் விரோதி மர்மக்குள மகேஸ்வரனை ஒரு கை பார்!'' என்று உரக்கக் கூறினான்.

ஜல விருகன் என சித்தசாதகன் குறிப்பிட்டது ஓநாய்த் தலையனைத் தான். இதே சமயம் மகரகேது தன் நீர்யானை மீது அமர்ந்து வந்து ஜல விருகனைத் தடுக்க முயன்றான். ஜல விருகனோ தன் கதையால் நீர் யானையின் தலை மீது ஓங்கி அடிக்கவே அது விழுந்தது. அதன் மீதிருந்த மகரகேது கீழே குதித்து வாளை உருவி ஜலவிருகனைத் தாக்கினான். ஆனால் வாள் ஜல விருகனின் தோளில் லேசான காயத்தைத் தான் ஏற்படுத்தியது.

அதைக் கண்ட சித்தசாதகன் மகர கேதுவை அடித்து வீழ்த்துமாறு மனிதக் குரங்கை ஏவினான். அப்போது பலமாக யாரோ சீட்டி அடிக்கவே



நாலாபுறத்திலிருந்தும் காடர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்களது தலைவனான காட்டான் ஈட்டியை உயர்த்தியவாறே பூசாரியின் பக்கம் வந்தான். அவனிடம் ''பூசாரி! ஆலமரத்து ஆண்டவன் இவ்வளவு மனிதர்களையுமா நமக்கு ஆகாரமாக அனுப்பி இருக்கிறார்?'' என்று மகிழ்ச்சி ததும்பக் கேட்டான். பூசாரி தலையை ஆட்டவே காடர்கள் சித்தசாதகனை நோக்கி ஓடி வந்தார்கள்.

மகரகேது காயப்பட்ட நீர் யானையை எழுப்பிப் பார்த்தான். அது எழாதிருக்கவே, அவன் மர்மக் குள மகேஸ்வரனைப் பார்த்து, ''மகேஸ்வரா! இந்த யானையை எழுந்து நிற்கச் செய்யுங்கள். சித்த சாதகன் ஆவேசத்தில் ஏதோ பேசி விட்டாலும் அவன் மிகவும் நல்லவனே. இவனது நண்பன் ஜெய



சிலனும் நமக்கு உதவுபவரே. வைத்தியரும் அவரும் அன்ன ரதத்தில் இங்கு வந்து கொண்டிருக்கிறார்கள்.

நதிக்கரையில் நடந்தது எதுவும் தெரியாததால் மகேஸ்வரனுக்கு மகரகேது சொன்னது எதுவும் புரியவில்லை. மகரகேதுவின் யானையின் பக்கம் போய்விட்டால்தான் எந்த ஆபத்தையும் எதிர்கொள்ள முடியும் என்று எண்ணி அடிமேல் அடி எடுத்து வைத்து அவன் மகரகேது இருக்கும் இடத்திற்குச் சென்றான்.

இச்சமயத்தில் மகரகேதுவால் தாக்கப்பட்ட ஜலவிருகன் படுகாயம் அடைந்து முனகியவாறே சித்தசாதகனைப் பார்த்தான். சித்தசாதகனும், ''உன் காயம் ஒன்றும் பெரிதாக இல்லை. எழுந்து உன் கதையைக் கையில் எடுத்துக் கொள்!'' என்று கூறினான். பிறகு அவன் மகரகேதுவைப் பார்த்து, ''கேது! இனி யாருக்கு ஆபத்து என்பதைப் புரிந்து கொள்!'' என்றான்.

மகரகேதுவும், ''மனித மாமிசத்தை உண்ணும் இந்தக் காடர்கள் தம் ஆண்டவன் தமக்கு இரையாக மனிதர்களை அனுப்பி இருப்பதாக எண்ணி உற்சாகத்துடன் இருக்கிறார்கள். முதலில் நாம் இவர்களிடமிருந்து தப்ப வேண்டும்,'' எனக் கூறித் தன் வாளை உறுதியாகப் பற்றினான்.

அப்போது சித்தசாதகன், ''கேது! நீ சரியாகவே புரிந்து கொண்டிருக்கிறாய். நானும் ஜெயசீலனும் மன்னரின் புதல்வரையும் புதல்வியையும் கண்டுபிடித்து அவரிடம் ஒப்படைக்கும்வரை எங்கள் உயிர் போகாது. இந்தக் காடர்களிடம் முதலில் நல்ல விதமாகப் பேசிப் பார்க்கிறேன். நான் சொல்கிறபடி அவர்கள் நடந்தால் சரி. இல்லாவிட்டால் அவர்களை எல்லாம் அழித்துவிடுவேன்,'' என்றான்.

அப்போது பூசாரி சாமி வந்தவன் போலத் திடீரென்று ''ஆலமரத்து ஆண்டவா! பசி, ஒரே பசி!! ஆண்டவன் அனுப்பிய மனிதர்களே! வாருங்கள், ஆண்டவனின் ஆலயத்திற்குப் போவோம். அங்கு உங்களை ஆண்டவனுக்கு நிவேதனம் செய்துவிட்டு பிறகு நாங்கள் உண்போம்,'' என்று உரக்கக் கூவினான்.

சித்தசாதகனோ தன் ஈட்டியை உயர்த்தி ''அடே, காட்டுமிராண்டிகளே! எங்களை யாரும் உங்களிடம் அனுப்பவில்லை. எங்களில் சிலர் இங்கு எங்கோ இருக்கிறார்கள்.

அவர்களைத் தான் தேடிக் கொண்டிருக்கிறோம். எனவே நீங்கள் பேசாமல் திரும்பப் போய்விடுங்கள்,'' என்று நயமாகக் கூறினான்.

அப்போது காட்டான், ''அதெல்லாம் தெரியாது. எங்களுக்கு ஒரே பசி. உங்கள் மகேஸ்வரனை எங்கள் ஆண்டவன் ஆகாயத்திலிருந்து எங்களிடையே போட்டானே அதுபோல ஆண்டவன் உங்களையும் எங்களிடம் அனுப்பி இருக்கிறான்,'' என்றான் காட்டமாக.

சித்தசாதகனும், ''ஓகோ! உங்கள் ஆண்டவனா எங்களை அனுப்பினார்? இரு என்ன செய்கிறேன், பார்!'' என்று கூறித் தன் மனிதக் குரங்கை அவன் மீது ஏவினான். அது ஒரே பாய்ச்சலில் காட்டான் மீது விழுந்து அவனைத் தன் இரு கைகளால் உயரத் தூக்கியது.

பூசாரி 'ஆ, ஊ' என்று ஆர்ப்பாட்டம் செய்யவே, மகரகேதுவின் யானை அவனைத் துதிக்கையால் உயரத் தூக்கியது.

சித்தசாதகன் உடனே ''இன்னமும் ஏன் தாமதம்? ஜலவிருகா! உன் கதையின் சக்தியைக் காட்டு. இந்தக் காடர்களை அடித்துத் தூள்தூளாக்கு!'' என்று உரக்கக் கட்டளை இட்டான். ஜலவிருகனும், ''சாதகர் வாழ்க!'' எனக் கோஷம் போட்டவாறே தன் கல் கதையால் காடர்களை பலமாக அடிக்கலானான். பசியால் துடித்த காடர்கள் முதலில் ஜலவிருகனை எதிர்த்தபோதிலும் பின்னர் சோர்ந்து போனார்கள்.

சித்தசாதகனும் ஜலவிருகனைப் பார்த்து, ''பேஷ். அடி, விடாதே! செம்மையாய் கொடு. இதோ நானும் தாக்குகிறேன்,'' எனக் கூறி



ஈட்டியுடன் ஓடினான். காடர்கள் அடி வாங்கி அலறினார்கள். பலர் அங் கிருந்து ஓட்டம் பிடிக்க, எங்கும் குழப்பமும் சத்தமுமாக இருந்தது.

காட்டான் திகைத்துப் போனான். இதற்குமுன் அவன் வார்த்தைக்கு யாரும் எதிராகச் சொல்லியதும் இல்லை, தாக்கியதும் இல்லை. மேலும் ஆலமரத்து ஆண்டவன் தன்னைக் காப்பாற்றுவான் என நம்பினான். கிழப் பூசாரி மந்திரங் களை உச்சரித்து எதிரிகளை விரட்டி விடுவான் என்று எதிர்பார்த்தான். ஆனால் அவன் எண்ணியபடி எதுவும் நடக்கவில்லை.

அது மட்டுமா? மிகவும் பலம் பொருந்திய காடர்களின் தலைவ னான தானே தோற்று திக்குமுக்கா டும் நிலைக்கு வந்தாகி விட்டதே என்று எண்ணி 'அவன் இனி என்ன நடக்குமோ?' என்று பயப்படலா னான். தன் ஆட்கள் அலறிக் கொண்டு உயிர் தப்ப ஓடுவது கண்டு எதுவும் செய்ய முடியாமல் பற்களை 'நறநற' வென்று கடித்துக் கொண்டிருந்தான். இனி தப்ப வழியே இல்லை என்பது நன்கு தெரிந்துவிட்டது.

அப்போது சில குதிரை வீரர்கள் வேகமாக வந்து ''நிறுத்துங்கள் சண் டையை. இது ஹிரண்யபுர மன்னரின் கட்டளை,'' என்றார்கள். அதைக் கேட்ட சித்தசாதகனும் காடர்களும் ஒருவரோடு ஒருவர் சண்டை போடு வதை நிறுத்திவிட்டு அவர்களை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

மர்மக்குள மகேஸ்வரன் நடு நடுங்கியவாறே ''மகரகேது! இனி மேலும் நாம் இங்கே இருக்கக் கூடாது. நம் மர்மக் குளத்திற்குப் போய்விட வேண்டும்,'' என்று குரல் கொடுத்தான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் தன் குரலை உயர்த்தி ''அடே, மதி கெட்ட மகேஸ்வரா! நீ எங்கும் ஓடிப்போய் விட முடியாது. நீ மிகவும் பத்திரமாக நினைக்கும் இடமும் நீர் நிலையும் உனக்குத் தீங்கு விளைவிக்கப் போகிறது,'' என்று கூறித் தன் ஈட்டியை அவனது மார்பிற்கு நேராக நீட்டினான். *(தொடரும்)*



நவீன வேதாளக் கதை

# வயதும் உடல்நலமும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த நள்ளிரவில் நீ இப்படி விடா முயற்சியுடன் ஒரு செயலைச் செய்ய முற்பட்டிருக்கிறாயே. இது உனக்காகவா அல்லது வேறு யாருக்காகவா? உனக்க[illegible] என்றால் நீ பாஸ்கரனைப் போல ஏமாற்றம் கூட அடைந்துவிடலாம். பாத்திரம்



அறிந்து பிச்சை இடு என்று பெரியவர்கள் சும்மாவா சொன்னார்கள்? இதை உனக்கு விளக்க அவனது கதையைச் சொல்கிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறி கதை சொல்லத் தொடங்கியது.

பாஸ்கரன் பரம ஏழை. நாள் முழுதும் ஓடிஓடி உழைத்தாலும் அவனுக்குப் போதிய ஊதியம் கிடைக்காமல் இருந்தது. ஏதோ கிடைத்ததைக் கொண்டு எப்படியோ காலம் தள்ளி வந்தான்.

ஒருநாள் அவனுக்கு ஒரு கல்யாண வீட்டில் வேலை கிடைத்தது. கிணற்றிலிருந்து தண்ணீர் சேந்தி தொட்டியில் நிரப்புவதும் சமையலுக்கான பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவிக் கொடுப்பதும் தான் அந்த வேலை. கல்யாண வீட்டில் பட்சணங்களுக்கும் குளிர் பானங்களுக்கும் குறைவே இல்லை. அதனால் பாஸ்கரனுக்குத் தின்ன ஏதாவது ஒன்று போக வரக் கிடைத்துக் கொண்டே இருந்தது.

அவனுக்கு அங்கு ஒருநாள் வேலை தான். இந்த மாதிரி கல்யாண வீடுகளில் தினமும் வேலை கிடைத்தால் சுகமாக வாழலாமே என நினைத்து அவன் சமையல்காரர்களிடம் ''நானும் உங்களோடு சேர்ந்து கல்யாண வீடுகளில் வேலை செய்ய விரும்புகிறேன். என்னையும் உங்களோடு சேர்த்துக் கொள்வீர்களா?'' என்று கேட்டான்.

அவர்களும், ''எங்களோடு வேலை செய்பவனுக்குச் சமையல் வேலை தெரிந்திருக்க வேண்டும். உன் போன்றவர்களை அந்தந்த வீட்டுக்காரர்களே வைத்துக் கொள்வார்கள். எங்களுக்கும் தினமும் இந்த மாதிரி கல்யாணச் சமையல் வேலையும் கிடைக்காது. எப்போதாவது தான் கிடைக்கும். அதனால் கல்யாணத்தை நடத்தும் பணக்காரர் வீடுகளில் எடுபிடி வேலைகளைச் செய்! தினமும் நல்ல சாப்பாடு கிடைத்துக் கொண்டே இருக்கும்,'' என்றார்கள்.

அப்போது பாஸ்கரன் மனதில், ''நான் ஏழையாக இராமல் பணக்காரனாக ஆகிவிட்டால் தினமும் விருந்து சாப்பாட்டைச் சாப்பிட்டுக் கொண்டு சுகமாக இருக்கலாமே!'' என்று எண்ணினான்.

எனவே தான் பணக்காரனாகி விடுவது என்று தீர்மானித்து அந்த ஊர் எல்லையிலுள்ள மடத்தில் இருக்கும் யோகியைப் போய்ப்

பார்த்தான். யோகியும் அவன் சொன்னதைக் கேட்டு சிரித்தார்.

பிறகு அவர் ''மகனே! மரம் இருந்த இடத்திலிருந்து நகராமல் இனிய பழங்களைக் கொடுக்கிறது. ஆறு ஓடி இனிய நீரை எல்லோருக்கும் கொடுக்கிறது. எனவே அவரவர் தகுதிக்கு ஏற்பத் தான் எதுவுமே நடக்கும். நீ சுகம் என்று நினைப்பது எல்லாம் சுகமும் அல்ல. கஷ்டம் என நினைப்பதெல்லாம் கஷ்டமும் அல்ல. இதோ பார். இந்த உலகில் யாரும் உழைக்காமல் எதையும் அடைந்துவிட முடியாது. இதுதான் கடவுள் விதித்துள்ள சட்ட திட்டம்,'' என்றார்.

பாஸ்கரனோ அதை எல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் தன்னை எப்படியாவது பணக்காரனாக ஆக்கிவிடும்படி அவரிடம் கெஞ்சினான்.

அப்போது அவர் அவனிடம் ஒரு மூலிகையைக் கொடுத்து ''அடுத்த ஊரில் தினகரன் என்ற பணக்காரர் இருக்கிறார். அவரது மனைவி இரண்டு ஆண்டுகளுக்கு முன் இறந்து போனாள். அவரது இரு மகன்களும் அயல்நாட்டில் இருக்கிறார்கள். அவருக்குத் தங்கை உறவில் தூரத்து உறவினள் ஒருத்தி அவரது வீட்டில் இருந்து அவரை கவனித்துக் கொள்கிறாள். நீ போய் அவரைப் பார்! நீங்கள் இருவரும் ஒரே சமயத்தில் இந்த மூலிகையை உட்கொண்டால் நீ அவரது உடலில் புகுந்துவிடுவாய். அவரும் உன் உடலில் புகுந்து



விடுவார். இந்த மாற்றத்தால் நீ விரும்பியபடி சுகங்களைக் காணலாம்,'' என்றார்.

பாஸ்கரனும், ''தினகரன் இதற்கு ஒப்புக் கொள்வாரா?'' என்று கேட்கவே, யோகியும் ''அவர் உன் போன்றவரைத் தான் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறார். நீ ஒருமுறை நன்கு யோசி. நீ வாலிபன், அவருக்கு ஐம்பது வயதாகிறது. இந்த மாற்றத்தால் உன் இள உடலை அவருக்குக் கொடுத்துவிட்டு அவரது வயதான உடலை நீ ஏற்கப் போகிறாய். எனவே நீ ஒரு முடிவுக்கு வா!'' என்றார்.

பாஸ்கரனும், ''வயது பற்றி எனக்குக் கவலை இல்லை. எனக்கு சுகம் தான் வேண்டும்,'' எனக் கூறி யோகி கொடுத்த மூலிகையுடன் அடுத்த ஊருக்குப் போய் தினகரனைக் கண்டான்.



அவன் யோகி சொன்னதை தின கரனிடம் கூறவே அவரும், ''நானும் உன்னைப் போன்ற ஒருவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். யோகி கூறியபடி மூலிகையைப் பயன்படுத்தி நான் உன் உடலிலும், நீ என் உடலிலும் புகுந்து கொள் வோம்,'' என்றார். அதன்படி பாஸ் கரன் தினகரனின் உடலில் புகுந்தான். தினகரன் பாஸ்கரனின் உடலில் புகுந்து கொண்டான்.

தினகரனின் உடலில் புகுந்த பாஸ்கரனுக்குக் கட்டுக்கடங்காத ஆசைகள் வந்துவிட்டன. தினகர னின் தங்கையைக் கூப்பிட்டு, ''இன்று நீ எனக்கு லட்டுகள் செய்து கொண்டு வா!'' என்றான்.

அவளும் இருபது லட்டுகள் செய்து பாஸ்கரனின் உடலில் புகுந்த தினகரனிடம், ''நீ வேலைக்குச் சேர்ந்த அன்றே உனக்கு நல்ல வேட்டை தான். நீ லட்டுகளைச் சாப்பிடுவதை அவர் பார்த்து ரசிப் பார். அவருக்கு சர்க்கரை வியாதி. அதனால் தித்திப்புப் பண்டங்களைத் தான் சாப்பிடாமல் வேலைக்காரர் களைச் சாப்பிட வைத்து அதைப் பார்த்து மகிழ்வார்,'' என்றாள்.

லட்டுகளை வாங்கிக் கொண்ட பாஸ்கரனின் உடலில் புகுந்திருந்த தினகரன் நான்கு லட்டுகளை எடுத் துத் தன் வாயில் திணித்து விழுங் கினான். தினகரனின் உடலில் புகுந்த பாஸ்கரனால் லட்டுகளைக் கண்டும் இரண்டிற்கு மேல் சாப்பிட முடிய வில்லை. இதைக் கண்ட தினகரனின் தங்கை ''என்ன அண்ணா இது? இரண்டு லட்டுகளை எடுத்துத் தின்று விட்டாயே! சரி, நதிக்கரையோரம் ஒரு மணி நேரத்திற்கு வேகவேகமாக நடந்துவிட்டு வா!'' என்று கூறி அனுப்பினாள்.

அப்போதுதான் தினகரனின் உடலில் இருந்த பாஸ்கரனுக்கு அந்த உடலில் என்னென்ன நோய்கள் உள்ளன என்று தெரிய வந்தது. இப் போது எவ்வளவு சாப்பிட ஆசைப் பட்டாலும் அவனால் அதிகம் சாப்பிட முடியவில்லை. இதற்காக அவன் தினமும் பலவித தேகப் பயிற்சிகளைச் செய்து உடலைச் சரி செய்யலானான். அந்த உடலில் இருந்த நோய்களும் ஒவ்வொன்றாக மறைந்து போயின.

பாஸ்கரனின் உடலில் புகுந்த தின கரன் அவ்வீட்டு வேலைக்காரனாக

இருந்தும் வேலை செய்ய மனம் இல்லாமல் இருந்தான். வேலை செய்யாமல் இருந்தே சாப்பிட வேண்டும் என்ற எண்ணம் தான் இருந்தது. ஆனால் தினகரனின் உடலில் புகுந்த பாஸ்கரன் அவனுக்குக் கடினமான வேலைகளைக் கொடுத்து நெட்டி வாங்கலானான்.

ஒருமுறை பாஸ்கரனின் உடலில் இருந்த தினகரன் கோபமாக, ''என்னால் நீ பணக்காரன் ஆனாய். அதற்கு நன்றி காட்டும் விதத்திலாவது நீ என்னை இந்த மாதிரி வேலைகளை எல்லாம் செய்யுமாறு சொல்லக் கூடாது,'' என்று கத்தினான்.

அதை தினகரனின் உடலில் இருந்த பாஸ்கரன் ஏற்கவில்லை. அவனிடம், ''இஷ்டம் இருந்தால் நீ இப்படியே இரு. உனக்கு இது பிடிக்கவில்லை என்றால் நாம் முன்போல ஆகிவிடலாம்,'' என்றான். பாஸ்கரனின் உடலில் புகுந்த தினகரனுக்கு முன்போல ஆகிவிடுவதற்கு விருப்பம் இல்லை.

இப்படியே ஒரு வருடம் கழிந்தது. அப்போது மூலிகையைக் கொடுத்த யோகி அவர்களைப் பார்க்க வந்தார். இருவரும் அவரை வணங்கித் தம் அனுபவங்களைக் கூறினார்கள்.

அப்போது யோகி தினகரனின் உடலில் இருந்த பாஸ்கரனிடம், ''ஒரு வருட காலம் நீ பணக்காரனின் சுகத்தை அனுபவித்துவிட்டாய். இனி நீ தினகரனின் உடலிலிருந்து உன் உடலுக்குப் போய்விடு!'' என்றார்.



அவனும், ''நான் இதற்குத் தயாராக இருக்கிறேன். ஆனால் நான் முன்போல பாஸ்கரனாகிவிட்டால் தினகரர் என்னைத் தம் வேலையாளாக வைத்துக் கொள்ள சம்மதிக்க வேண்டும்,'' என்றான்.

இதைக் கேட்ட பாஸ்கரனின் உடலில் இருந்த தினகரன் கோபத்தோடு ''இப்போதைய பாஸ்கரன் நன்றி மறந்தவன். நான் கொடுத்த உடலில் இருந்துகொண்டு என்னிடம் மிகக் கடினமான வேலைகளைச் செய்யச் சொன்னவன். இப்படிப்பட்ட இவனையா என் வீட்டில் வேலையாளாக நான் வைத்துக் கொள்வது?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட யோகி கடும் குரலில் ''உங்களில் யாரும் நன்றி மறந்தவர் அல்ல. பாஸ்கரன் உன் வீட்டில் இருப்பது மிகவும் சரியே!''

எனக் கூறி தமது மூலிகையால் அவர்கள் இருவரையும் முன்பு இருந்ததுபோல் ஆக்கி ஆசிகள் அளித்துவிட்டுச் சென்றார்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''யோகி கூறியது சரியா? பாஸ்கரன் தினகரனின் உடலில் புகுந்து கொண்டு சுகங்களை அனுபவித் தான். இந்த வாய்ப்பை தினகரன் தானே கொடுத்தான்? ஆனால் பாஸ் கரன் என்ன செய்தான்? தன் உடலில் புகுந்து வேலைக்காரனாக இருந்த தினகரனுக்குக் கடினமான வேலை களைக் கொடுத்து வாட்டி வதைத் தானே. இதனால் பாஸ்கரன் நன்றி மறந்தவன் தானே. அப்படி இருக்க அவர் யாருமே நன்றி மறந்தவர் அல்ல என்று ஏன் கூறினார்? இதற் குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும், ''பாஸ்கரன் தின கரனின் உடலில் புகுந்தபின் அதில் பல நோய்கள் இருப்பதை அறிந் தான். எனவே அவற்றைப் போக்க அவன் பல நடவடிக்கைகளை மேற் கொண்டான். தேகப் பயிற்சிகளைச் செய்தும் தினமும் நடந்தும் அதில் இருந்த நோய்களை விலகச் செய் தான். அது மட்டுமல்ல, இளம் வயதிலுள்ள தன் உடலை தினகரன் கெடுத்துவிடக் கூடாதே என்பதற் காகத் தான் கடினமான வேலைகளை அவனுக்குக் கொடுத்தான். மேலும் தினகரன் நன்கு உழைக்க வேண்டும் என்பதை பாஸ்கரன் அவனுக்கு உணர்த்தினான். எனவே தினகரன் கூறியது போல நன்றி மறந்தவன் அல்ல. அவன் தினகரனின் நோயுற்ற உடலைக் குணப்படுத்தினான். தினகரன் செய்த உதவிக்கு இது பதில் உதவி. எனவே யோகி யாரும் நன்றி மறந்தவர் அல்ல என்று கூறியது மிகவும் சரியே!'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



இந்தியப் புராதனக் கதைகள் – 14

# அதிர்ஷ்டம் பார்த்தாயா!



ஜகனும் சுகுமாரனும் காட்டு வழியே போய்க் கொண்டிருந்தார்கள். அந்த இரு நண்பர்களுக்கும் நகரில் வேலைகள் இருந்தன.

அப்போது திடீரென மழை பிடித்துக் கொள்ளவே எதிரே தென் பட்ட ஒரு பாழடைந்த கோட்டை யில் ஓரிடத்தில் ஒதுங்கி நின்றார்கள். பலத்த மழையால் அவர்கள் நின்ற இடத்திலிருந்த ஒரு தூண் சரிந்து விழுந்தது. தூண் இருந்த இடத்தில் பள்ளம் ஏற்படவே அதில் ஏதோ இருப்பதை அந்த இரு நண்பர்களும் பார்த்தார்கள்.

அது என்ன என்று பார்க்க அவர் கள் அதை வெளியே எடுத்தார்கள். அது ஒரு பழங்காலத்துப் பானை. அப் பானை நிறைய தங்கக் கட்டிகள் இருப்பதைக் கண்டு இருவரும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

அப்போது ஜகன் சுகுமாரனிடம், ''நண்பா! என்ன அதிர்ஷ்டம் பார்த் தாயா! இதை நாம் சமமாகப் பங் கிட்டுக் கொண்டு நாமும் சுகமாக வாழ்ந்து பிறருக்கும் கொடுத்து உதவு வோம்,'' என்றான்.

சுகுமாரனும், ''நீ சொல்வது போலவே பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் இப்போது வேண்டாம். இதை நகருக்கு எடுத்துச் செல்லக் கூடாது. இன்றிரவு நாம் திரும்பி வரும்போது ஒரு சாக்குப் பையில் இந்தப் பானையை வைத்து தூக்கிக் கொண்டு நம் ஊருக்குப் போகலாம். நாம் நகருக்குப் போய்விட்டுத் திரும்பி வரும்வரை இதை இந்தப்

பள்ளத்திலேயே நன்கு மறைத்து வைக்கலாம்,'' என்றான்.

ஜகனும் 'சரி' எனவே, அந்தப் பள்ளத்தில் பானையை வைத்து இலைகளையும் மரக்கிளைகளையும் ஒடித்துப் போட்டு மூடி மறைத்துவிட்டார்கள். மழை நின்றதும் அவர்கள் அங்கிருந்து நகருக்குச் சென்றார்கள்.

நகருக்குள் போனதும் ஜகன், ''சுகுமார்! நான் என் வேலைகளை முடித்துக் கொண்டு நகர எல்லையில் காத்திருக்கிறேன். நீயும் சாமான்களை வாங்கிக் கொண்டு அங்கே வந்துவிடு. இருவருமாகச் சேர்ந்து காட்டிற்குப்போய் தங்கக் கட்டிகளை எடுத்துக் கொண்டு போகலாம்,'' எனக் கூறி விட்டுச் சென்றான்.

ஆனால் சுகுமாரன் தன் வேலைகளை ஒதுக்கிவிட்டுத் திரும்பிக் காட்டிற்குள் சென்றான். அங்கு மறைத்து வைக்கப்பட்டிருந்த குடத்தை எடுத்து அதில் இருந்த தங்கக்கட்டிகளைத் தான் கொண்டு வந்த ஒரு சாக்குப் பைக்குள் போட்டு அதை வேறோரு இடத்தில் மறைத்து வைத்தான். பிறகு வந்து தங்கக் கட்டிகள் இருந்த குடத்தில் மண்ணையும் கல்லையும் போட்டு நிரப்பி அதே இடத்தில் வைத்து முன் இருந்தது போல இலைகளையும் கிளைகளையும் போட்டு மறைத்துவிட்டு நகருக்குச் சென்றான்.

மாலையானதும் சுகுமாரன் ஜகன் குறிப்பிட்ட இடத்திற்கு வந்தான். அப்போது ஜகன், ''நீ வாங்கிய பொருள்களைக் கொண்டு வரவில்லையா?'' என்று கேட்டான்.

அவனும் சற்றுத் தயங்கியவாறே ''இல்லை... வந்து... நான்...'' என்று உளறினான். அப்போது ஜகன் ஏதோ நடக்கக்கூடாத ஒன்று நடந்திருக்கிறது என்று தெரிந்து கொண்டுவிட்டான்.

இருவரும் காட்டிற்குள் போய் பாழடைந்த கோட்டையில் தாம் குடத்தை மறைத்து வைத்த இடத்தை



அடைந்தார்கள். ஜகனும் பள்ளத்தில் இருந்து குடத்தை எடுத்துக் கவிழ்க் கவே அதிலிருந்து கற்களும் மண் ணுமே விழுந்தன.

அப்போது சுகுமாரன், ''நம் அதிர்ஷ்டம் இதுதான். நாம் முன் பிறப்பில் யாரையோ ஏமாற்றி இருக் கிறோம். அதனுடைய பலன்தான் இது. விதி நமக்குப் பொன்னைக் காட்டி மண்ணைக் கொடுத்திருக் கிறது,'' என்று கூறித் தலையில் அடித்துக் கொண்டான்.

ஜகன் அவனது பேச்சையும் செய லையும் கண்டு அவன் எதையோ மறைத்து நடிக்கிறான் என்று புரிந்து கொண்டுவிட்டான். அதனால் ஆத் திரப்படாமல் அவன் சுகுமாரனிடம், ''சரி வருத்தப்படாதே. இது வந்தது போலவே போயும்விட்டது. போகட் டும், விட்டுத்தள்ளு'' என்றான்.

சுகுமாரனும் ''நீ சொன்னால் சரி'' என்று ஆறுதல் அடைந்தவனைப் போலக் கூறினான். அதன் பிறகு இருவரும் அங்கிருந்து கிளம்பித் தம் ஊரை அடைந்தார்கள்.

இரண்டு நாட்களுக்குப் பின் சுகு மாரன் காட்டிற்குப் போய் தான் மறைத்து வைத்த தங்கக் கட்டிகளை எடுத்துக் கொண்டு இரவோடு இர வாகத் தன் வீட்டிற்கு வந்தான். அன்று முதல் அவன் தாராளமாகச் செலவு செய்து வசதிகளுடன் வாழலானான்.

இதை கவனித்த ஜகன் தங்கக் கட்டிகளை சுகுமாரன் அமுக்கிக் கொண்டுவிட்டான் என்று தெரிந்து கொண்டான். நன்கு யோசித்தான்.



அவனுக்கு ஒரு வழி தெரிந்தது.

அவன் தன் வீட்டினுள் சுகு மாரனின் உருவச் சிலையைக் களி மண்ணால் செய்து வைத்தான். இரு குரங்குக் குட்டிகளைப் பிடித்து தின மும் வேர்க் கடலையை சுகுமாரனின் உருவச் சிலையின் கைகளில் வைத்து அதைத் தாவி எடுத்துக் கொரிக்கப் பழக்கி வந்தான்.

சுகுமாரனும் அவன் மனைவியும் காசியாத்திரை போக விரும்பினார் கள். அதனால் தன் இரு குழந்தை களை ஜகனிடம் ஒப்படைத்து, ''இவர்களை மிக ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். இரண்டு வாரத்தில் திரும்பி வந்துவிடுகிறோம்,'' எனக் கூறிவிட்டு அவன் தன் மனைவி யுடன் கிளம்பிவிட்டான்.

அவர்கள் போனதும் ஜகன் அக்

குழந்தைகளிடம், ''குழந்தைகளே! என் மாமாவின் ஊரில் அவருக்குப் பெரிய தோப்பு இருக்கிறது. அதில் நிறைய மாமரங்களும் கொய்யா மரங்களும் உள்ளன. நீங்கள் வேண்டிய பழங்களைப் பறித்துச் சாப்பிட்டுக் கொண்டே இருக்கலாம். உங்களுக்கும் அங்கே நன்றாகப் பொழுது போகும். அங்கே போகிறீர்களா?'' என்று கேட்டான்.

அதுகேட்டு அக்குழந்தைகளும் மகிழ்ந்துபோய் அங்கே போவதாகக் கூறவே, அவன் தொலை தூரத்தில் உள்ள தன் மாமன் ஊருக்கு அவர்களை அழைத்துப் போய் தன் மாமன் வீட்டில் அவர்களை விட்டுவிட்டுத் தன் ஊருக்குத் திரும்பி வந்தான்.

இரண்டு வாரங்களாயின. சுகுமாரனும் ஊர் திரும்பி வந்து ஜகனிடம், ''என் குழந்தைகள் எங்கே? அழைத்து வா!'' எனவே அவனும் தான் வளர்த்த குரங்குக் குட்டிகளைக் கொண்டு வந்து அவனிடம் இதோ உன் குழந்தைகள்,'' என்றான். குரங்குக் குட்டிகள் சுகுமாரனைப் பார்த்ததும் அவன் கையில் வேர்க்கடலை இருப்பதாக எண்ணித் தாவி அவனைக் கட்டிக் கொண்டன.

அப்போது ஜகன், ''உன் அதிர்ஷ்டம் இதுதான். நீ முன்பிறப்பில் ஏதோ பாவம் செய்திருக்கிறாய். அதனால்தான் உன் இரு குழந்தைகளும் குரங்குக் குட்டிகளாக மாறிவிட்டன. விதி உனக்குக் குழந்தைகளை முதலில் கொடுத்து பிறகு இப்படி மாற்றி விட்டது,'' என்றான்.

சுகுமாரன் அதைக் கேட்டதும் சட்டென ஜகனின் கால்களில் விழுந்து ''என்னை மன்னித்துவிடு. நான் தான் காட்டில் கிடைத்த தங்கத்தை முழுவதும் உன்னை ஏமாற்றி எடுத்து வந்தேன். இப்போதே உன் பங்கைக் கொடுத்துவிடுகிறேன். என் குழந்தைகளைக் கொடுத்துவிடு. எனக்கு நல்ல பாடம் கற்பித்தாய்'' என்று கண்ணீர் விட்டுக் கூறினான்.

ஜகனும் தன் மாமனின் ஊரிலிருந்து சுகுமாரனின் குழந்தைகளை அழைத்து வந்து அவனிடம் ஒப்படைத்தான். இதற்குப் பின் அவர்கள் முன்போலவே நண்பர்களாகவே இருந்து வந்தார்கள்.






# ஒரு கைக்குட்டையின் கதை

இது ஒரு தனிரகக் கைக்குட்டை. இதை நீங்கள் கையில் எடுத்துக் கொண்டால் முகத்தையோ அல்லது மூக்கையோ துடைக்க உங்களுக்கு மனம் வராது. சம்பா ருமால் எனப்படும் இந்த ரகக் கைக்குட்டைகள் பூவேலைகள் கொண்டது. இமாசலப் பிரதேசத்து சம்பா என்ற ஊரின் பெயர் இதற்குச் சூட்டப்பட்டிருக்கிறது.

பணக்காரர்களும் அரச குடும்பத்தினரும் இப்பகுதியில் இக் கலையை வளர்த்தவர்கள். இந்த சதுர வடிவக் கைக்குட்டைகள் 18வது நூற்றாண்டில் பிரபலமாயின. இக்காலத்தில் பல கைவினைக் கலைஞர்கள் முகலாயர் ஆண்ட பகுதியிலிருந்து வெளியேறினார்கள். இங்கு மட்டுமல்ல, காங்க்டா, பாஷோலி ஆகிய நகரங்களிலும் அவர்கள் குடிபுகுந்தனர்.



பணக்காரர்கள் இக்கலைஞர்களைக் கொண்டு துணிகளில் படங்களை வரையச் சொல்லி அவர்களே வண்ண நூல்களால் பூ வேலை செய்வார்கள். இவை மகாபாரதக் காட்சிகளாக இருக்கும். கிருஷ்ணர் கோபிகைகளுடனும், விநாயகர் சித்தி, புத்தியுடனும் இருப்பது பூ வேலைகளில் காட்டப்படுகின்றன.

குருநானக்கின் சகோதரி பீபீ நானக் 16வது நூற்றாண்டில் தயாரித்த இந்த ரக கைக்குட்டை தான் மிகப் பழமையானது. இது இப்போதும் பஞ்சாப் மாநிலத்தில் ஹோஷியார்புர் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.



# சிறு மாற்றம் தான்!

பாலக்காடு ராமன் கோவைக்குப் பிழைக்க வந்தான். அவனுக்கு சிறு சிறு வீட்டு வேலைகள்தான் செய்யத் தெரியும். வேலைக்காக அவன் தெருத் தெருவாக அலைந்தபோது இட்டிலிக் கடை ஈசுவரன் அவனைத் தன் கடையில் வேலை செய்யச் சொன்னார்.

அவர், "இதோ பார், ராமா! இங்கே என்னால் சம்பளம் என்று எதுவும் கொடுக்க முடியாது. கடை வேலைகளை எல்லாம் செய்ய வேண்டும். சாப்பிட இட்டிலிதான் கிடைக்கும்," என்றார்.

ராமனும், "இது போதும். பிறகு நல்ல வேலை கிடைத்தால் போய்க் கொள்கிறேன்," என்றான். அதன் பிறகு அவன் ஈசுவரனின் கடையில் இரண்டு மாதம் வேலை பார்த்தான்.

ஒருநாள் ஈசுவரன் ராமனிடம், "ராமா! இந்த ஊரில் கிருஷ்ணன் என்ற பணக்காரருக்கு ஒரு வேலையாள் வேண்டுமாம். வேலை இரண்டு மாதத்திற்குத்தான். அவரது இரு மகன்களும் தம் மனைவிகளுடன் காசிக்குப் போயிருக்கிறார்கள். திரும்பி வர இரண்டு மாதம் ஆகும். அவரது மனைவி நோயாளி. அதனால் நீ வீட்டு வேலைகளோடு சமையல் வேலையையும் செய்ய வேண்டும். தினமும் உனக்கு ஐந்து ரூபாய் கொடுப்பார். நீ போய் வேலை செய்து பணம் சேர்த்துக் கொள்!" என்று கூறி கிருஷ்ணனின் வீட்டிற்கு அனுப்பி வைத்தார்.

ராமனுக்கு சமைக்கவும் தெரியும். கிருஷ்ணன் அவனிடம், "உனக்கு இங்கே இரண்டு மாதத்திற்குதான் வேலை. என் மனைவியால் எந்த வேலையையும் செய்ய முடியாது. நீதான் அவள் சொல்கிறபடி எல்லா வேலையையும் செய்வதோடு அவள் சொல்கிறபடிதான் சமையலும் செய்ய வேண்டும்," என்றார்.

ராமனும் அவ்வாறே செய்வதாக

– சிந்துஜா சங்கர் –

உறுதி கூறினான். ராமன் கெட்டிக்காரன் ஆதலால் அந்த வீட்டு எஜமானியம்மாள் சொல்லிக் கொடுத்த சமையல் முறைகளைச் சட்டென கிரகித்துக் கொண்டான்.

கிருஷ்ணன் அவனது சமையலைப் பாராட்டி, ''ராமா! உன் சமையல் வெகுஜோர். குறிப்பாக நீ தயாரிக்கும் நெய் ரவாப் பொங்கலும் தேங்காய்ச் சட்டினியும் பிரமாதம்,'' என்று புகழ்ந்தார். அவனும், ''இவை அனைத்தும் எஜமானியம்மாள் கற்றுக் கொடுத்ததுதான். என் திறமை ஒன்றும் இல்லை,'' என்றான்.

இரண்டு மாதங்கள் கழிந்தன. காசிக்குப் போனவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். அப்போது கிருஷ்ணன் ராமனிடம், ''என் மருமகள்கள் வந்துவிட்டார்கள். இனிமேல் அவர்கள் வீட்டு வேலைகளையும் சமையலையும் கவனித்துக் கொள்வதோடு என் மனைவியின் தேவைகளையும் கவனித்துக் கொள்வார்கள். அதனால் உனக்கு இங்கே நாளையிலிருந்து வேலை இல்லை. இந்தா உன் சம்பளம் முந்நூறு ரூபாய்,'' என்று கூறிப் பணத்தைக் கொடுத்தார்.

ராமனும் பணத்தை வாங்கிக் கொண்டு ''எனக்கு நிறைய சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை உள்ளது. நானும் ஈசுவரனைப் போல ஓர் இட்டிலிக்கடை ஆரம்பிக்க எண்ணுகிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட கிருஷ்ணன் மிகவும் மகிழ்ந்து போனார். ராமன் வியாபாரம் செய்து முன்னுக்கு வர



வேண்டும் என்று அவன் எண்ணியதைக் கண்டு சந்தோஷப்பட்டு அவனை ஊக்குவித்து நல்லபடி வியாபாரத்தை நடத்த உதவவும் தீர்மானித்துக் கொண்டார்.

கிருஷ்ணன் பலமாகச் சிரித்து, ''ராமா! நீ இட்டிலிக் கடை வைத்தால் வியாபாரம் நடக்காது. ஈசுவரனின் இட்டிலி பெயர் பெற்று விட்டது. அதை வாங்க எல்லோரும் தேடிக் கொண்டு போகிறார்கள். அதனால் நான் சொல்கிறபடிச் செய். நீ ரவாப் பொங்கல் மிக நன்றாகச் செய்கிறாய். அதற்கு நீ அறைக்கும் சட்டினியும் ருசியாக இருக்கிறது. இவ்வூர் பஸ் ஸ்டாண்டின் பக்கத்தில் எனக்கு ஒரு சிறு கட்டடம் உள்ளது. உனக்கு அதைக் கொஞ்ச காலத்திற்கு வாடகை இல்லாமல் கொடுக்



கிறேன். நீ உன் ரவாப் பொங்கலை அங்கே தயாரித்து விற்பனை செய். எல்லோரும் அங்கு புதிதாகக் கிடைக்கும் உன் பொங்கலை வாங்கிச் சாப்பிடுவார்கள். உனக்கும் நல்ல வரும்படி கிடைக்கும்,'' என்றார்.

ராமனும் அவருக்கு நன்றி கூறி அவர் கொடுத்த இடத்தில்தான் ரவாப் பொங்கல் கடையை ஆரம்பித்தான். முதல் நாளிலேயே நல்ல வியாபாரம்.

அன்று மாலை ராமனைப் பார்க்க வந்த கிருஷ்ணன், ''ராமா! நீ ஒருவனாகவே கடையில் ஓடியாடி வேலை செய்ய முடியாது. கூட்டம் நிறைய வருகிறது. அதை நீ சமாளிக்க வேண்டும். அதனால் நீ நாளை முதல் உனக்கு உதவியாக ஒருவனை வைத்துக் கொள். அப்போதுதான் உன்னால் வியாபாரத்தை கவனிக்க முடியும்,'' என்றார். அவனும் அவரது யோசனைப்படியே ஒரு வேலையாளை வைத்துக் கொண்டான். வியாபாரமும் நன்கு நடந்தது.

ஒருவாரம் ஆயிற்று. கிருஷ்ணன் ராமனின் கடையைப் பார்க்க வந்தார். அப்போது கடையின் முன் பலர் நின்றுகொண்டு ரவாப் பொங்கல் வாங்கிச் சாப்பிடுவதைக் கண்டார்.

அவர் ராமனிடம், ''கடையில் அவ்வப்போது வசதிகள் செய்து கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். நல்ல வருமானம் வருவதால் அதைக் கொண்டு நாற்காலிகள் மேஜைகள் என்று வாங்கிப் போடு. கடைக்கு வருபவர்கள் உட்கார்ந்து சாப்பிட வேண்டும். கடை சுத்தமாக இருக்க வேண்டும். அப்போதுதான் வியாபாரம் நடக்கும்,'' என்றார்.

ராமனும், ''நீங்கள் கூறியபடியே செய்கிறேன். உங்களது அறிவுரைகளால் வியாபாரம் முன்னேறி வருகிறது. எனக்கு அவ்வப்போது வழிகாட்டிக் கொண்டே வாருங்கள்,'' என்று வேண்டினான்.

அதற்கு கிருஷ்ணனும் சிரித்துக் கொண்டே ''அது சரி. நான் இங்கு வரும்போதெல்லாம் என்ன செய்கிறேன் என்று கவனித்தாயா?'' என்று கேட்டார்.

ராமனும், ''நீங்கள்தாம் கடையில் என்னென்ன மாறுதல்கள் செய்ய வேண்டும் என்று கூறி வருகிறீர்கள். அவற்றை எல்லாம் செய்தும் வருகிறேனே!'' என்றான்.

கிருஷ்ணனும், ''நீ கவனித்தது இவ்வளவு தானா? நான் இங்கு வரும்போதெல்லாம் இன்னும் ஒரு செயலைச் செய்து வருகிறேனே! அதை நீ கவனிக்கவில்லையா?'' என்று கேட்டார்.

அதற்கு அவன் 'திருதிரு'வென்று விழித்தவாறே ''இல்லையே'' என்று கூற, அவரும் சிரித்துக்கொண்டே ''இங்கு வரும்போதெல்லாம் உன் ரவாப் பொங்கலை வாங்கி சாப்பிடுகிறேனே. அது ஏன் தெரியுமா?'' என்று கேட்டார்.

ராமனும், ''ஏன்? நான் செய்த ரவாப் பொங்கல் உங்களுக்கு மிகவும் பிடித்தது. அதனால்தான் சாப்பிடுகிறீர்கள்'' என்றான்.

அதற்கு அவரோ, ''அது மட்டும் அல்ல. உன் தயாரிப்பு தரம் குறையாமல் இருக்கிறதா என்று பார்க்கவே அவ்வாறு செய்கிறேன். தரம் சற்றும் குறையவில்லை. வியாபாரத்திற்குத் தரம் முக்கியம். தரம் குறைந்தால் வியாபாரம் தாழ்ந்து



விடும். எனவே அதில் கவனமாக இரு!'' என்றார்.

ராமனும், ''தரத்தில் கவனமாய்த் தான் இருக்கிறேன். இன்னொரு விஷயம். ஒரு சில நாட்களில் பொங்கல் கொஞ்சம் மிஞ்சி ஆறி உலர்ந்து போகிறது. அதை என்ன செய்வது என்று தெரியவில்லை,'' என்றான்.

கிருஷ்ணனும், ''அதைத்தூக்கி எறிய வேண்டியதுதான். அதை எத னுடனும் கலக்கக் கூடாது. அடுத்து சாப்பிட வருபவர்களுக்கு நீ கொடுப் பதில் அளவு குறையக் கூடாது. நீ ஆரம்பத்தில் ஒரு தட்டு பொங்கல் அரை ரூபாய் என விலை வைத்தாய். அதிலிருந்து அதே விலையில் அதே அளவுதான் கொடுத்து வருகிறாய். ஒரு சிலர் அரைத் தட்டு பொங்கல் வேண்டும் என்பார்கள். அப்போது நீ சற்றுப் பெரிய தட்டில் அதே அளவை வைத்துக் கொடு. பாதி விலையில் கொடுத்தாலும் அவர்கள் திருப்தி யுடன் சாப்பிடுவார்கள். வேறுசிலர் இன்னொரு அரைத் தட்டு பொங்கல் வேண்டும் எனக் கேட்டு வாங்கிச் சாப்பிடுவார்கள். தட்டில் மட்டும் சிறு மாற்றும் செய். ஆனால் எப் போதும் தரத்தையும் அளவையும் குறைத்துவிடாதே!'' என்றார்.

ராமனும், ''ஆகா! சிறு மாற்றம் தான். ஆனால் எவ்வளவு நல்ல பலன் என்பதை நான் புரிந்து கொண்டேன். வியாபாரத்தில் நல்ல அனுபவம் பெற்ற தங்களை வழிகாட்டியாகக் கொண்டு என் ரவாப் பொங்கல் கடையை நன்றாக நடத்தி வரு வேன்,'' என்றான்.

ராமனும் அனுபவம் மிக்க அறி வுரைகளை ஏற்றே நடந்து வந்தான். அதனால் தன் வியாபாரம் பெருகி யதைக் கண்டான். அது மட்டுமா? வியாபாரத்தின் நெளிவுசுளிவுகள் எல் லாம் அவனுக்குத் தெரிந்து போயின. அனுபவமிக்க கிருஷ்ணன் தனக்கு வழிகாட்டியாக வந்து அவ்வப்போது அறிவுரைகள் வழங்கி வருவது தனக் குக் கிடைத்த பெரும் பாக்கியமே என்று எண்ணி அவன் மகிழ்ந்தும் போனான். அவர் கூறியபடி நடந்து வந்ததால் அவனது ரவாப்பொங்கல் கடை மிகவும் பிரபலமாகிவிட்டது.



## ரூபாய் நோட்டு மாலை!



அண்மையில் சென்னையில் உள்ள ஒரு கோயிலில் விநாயக விக்கிரகத்திற்கு ரூ.50, ரூ.100, ரூ.500, ரூ.1000 ஆகிய ரூபாய் நோட்டுகள் கோர்க்கப்பட்ட மாலைகள் அணிவிக்கப்பட்டன. இம்மாலைகளின் மொத்த மதிப்பு ரூ.6,50,000 ஆகும். இவை இந்த விநாயகரின் கோயிலுக்கு வரும் பக்தர்களால் அளிக்கப்பட்டவை. சென்னையின் புறநகர் பகுதியிலுள்ள மற்றொரு கோயிலான பத்திரகாளி அம்மனுக்கும் இதுபோன்ற ரூபாய் நோட்டு மாலைகள் அணிவிக்கப்பட்டன. இவற்றின்மதிப்பு ரூ.2,00,000.

## குண்டூசி குத்தும் சாதனை!



கனடா நாட்டைச் சார்ந்த ப்ரெண்ட் மோஃபட் என்னும் 34 வயதானவர் ஓர் உலக சாதனையை நிகழ்த்திக் காட்ட விரும்பினார். இதற்காக அவர் தம் உடலில் 702 குண்டூசிகளையும் ஊசிகளையும் தம் உடல் முழுவதிலும் 8 மணி நேரத்திற்குள் குத்திக் கொண்டார். அவர் எட்டு மணி நேரத்துள் 1000 ஊசிகளைக் குத்திக் கொள்வதாகக் கூறி இருந்தார். ஆனால் அவரால் குறிப்பிட்ட நேரத்துள் 702 ஊசிகளைத் தான் குத்திக் கொள்ள முடிந்தது. இதற்கே அவரால் வலி தாங்க முடியவில்லை. குத்திய ஊசிகளை உடலிலிருந்து எடுத்தபோது மேலும் வலித்தது. இந்த சாதனையைச் செய்து கொண்டு இருந்தபோது அவர் இசையைக் கேட்டவாறே இருந்தாராம். அது அவரது வலியைக் கொஞ்சம் உணரச் செய்யாமல் இருந்ததாம்!

# ஹரியானா மாநில நாட்டுப்புறக் கதை

*இந்தியக் கலாச்சாரத்திற்கும் பண்பாட்டிற்கும் பிறப்பிடம் ஹரியானா எனக் கருதப்படுகிறது. இங்கிருந்து தான் பரதவம்சம் ஆட்சி புரிந்து வந்தது. படைக்கும் கடவுளான பிரம்மா இங்கு தவம்புரிந்து உலகை உருவாக்கியதாகக் கூறப்படுகிறது. வியாச முனிவர் இங்கு இருந்தே பாரதத்தை இயற்றினார். பாரதப்போர் நடந்த குருக்ஷேத்திரம் இங்குதான் உள்ளது. இப்போரின் போது பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்து இன்றும் உலகம் பாராட்டி பக்தியுடன் படிக்கும் பகவத் கீதையை வழங்கினார்.*

*ஹரியானா மாநிலம் 1966 நவம்பர் முதல் தேதியில் உருவாக்கப்பட்டது. இதன் பரப்பளவு 44,000 சதுர கிலோ மீட்டர். இதன் மொத்த மக்கள் தொகை 21,082,989. இம்மாநிலத்தின் கிழக்கில் உத்திர பிரதேஷும் டில்லியும், மேற்கில் பஞ்சாபும், வடக்கில் ஹிமாசல பிரதேஷும் தெற்கில் ராஜஸ்தானும் உள்ளன. இம்மாநிலத்தின் மலைகள் அரவல்லியும், ஷிவாலிக்கும் ஆகும். யமுனை, காக்கர் இங்கு பாயும் முக்கிய நதிகள். மானசீகமாக தற்போது கருதப்படும் சரஸ்வதி முன்பு இம்மாநிலத்தில்தான் பாய்ந்து கொண்டிருந்ததாம். இதன் தலைநகர் சண்டிகட். ஹிந்தி இம்மாநிலத்தின் முக்கிய மொழி. பஞ்சாபி, உருது மற்றும் வட்டார மொழியான ஹரியான்யவியும் இங்கு பேசப்படுகின்றன.*

# தங்கமீன் சிகிச்சை

ஹரியானாவின் ஒரு ஊரில் ஒரு பணக்கார விவசாயி தன் குடும்பத்துடன் சந்தோஷமாக வாழ்ந்து வந்தான். அவனது மகன்கள் ஏழு பேர்களில் அறுவருக்குத் திருமணம் நடந்து விட்டது. ஏழாவது மகன் பதினாறு வயதான இளைஞன். அவர்கள் யாவரும் கூட்டுக் குடும்பமாய் இருந்து தம் வயல்களில் வேலை செய்து நல்ல விளைச்சலைக் கண்டார்கள். இதனால் அந்தக் குடும்பம் சிரமப்படாமல் சுகமாக இருந்து வந்தது.



இப்படிக் கவலை இல்லாமல் வாழ்ந்த அக்குடும்பம் ஒரு கடும் சோதனைக்கு உள்ளாகியது. திடீ ரென்று அக்குடும்பத் தலைவருக்குக் கண் பார்வை மறைந்து போயிற்று.

இதைக் கண்டு அக்குடும்பத்தினர் பெரிதும் கவலைப்பட்டு பல வைத்தியர்களை அழைத்து வந்து காட்டினார்கள். ஆனால் அவர்கள் யாராலும் சிகிச்சை அளித்து அவருக்குப் பார்வை கிடைக்கச் செய்ய முடியவில்லை.

ஒருநாள் ஒரு சாது அந்த ஊருக்கு வந்தார். அவரைக் கண்ட விவசாயி யின் ஒரு மகன் அவரைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அவரும் அக்குடும்பத் தலைவரைப் பார்த்துவிட்டு ''இவரது இழந்த பார்வையைப் பெற ஒரேவழி கிழக்கே வெகுதொலைவில் உள்ள வங்கக்கடலில் வாழும் தங்க மீனைப் பிடித்து வந்து அதன் கண்ணை இவ ரது கண்களில் ஒற்றினால் இவருக்கு மீண்டும் பார்வை கிடைத்துவிடும்,'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

அப்போது தன் மகன்களிடம் அந்த விவசாயி, ''உங்களில் யார் அங்கு போய்த் தங்க மீனைப் பிடித்துக் கொண்டு வருகிறீர்கள்?'' என்று கேட்டான். முதல் ஆறு மகன்களும் தமக்கு மனைவி, மகள் என்று இருப்பதால் அவர்களை விட்டு விட்டு அவ்வளவு தூரம் போக முடியாது என்று கூறிவிட்டார்கள்.

அப்போது ஏழாவது மகனான இளைஞன் தன் தந்தையிடம்,



''அப்பா! மீனைக் கொண்டு வந்து உங்களுக்குப் பார்வை கிடைக்கச் செய்கிறேன்,'' என்று கூறிவிட்டு ஊரை விட்டுப் புறப்பட்டான்.

அவன் பல காடுகளையும் நாடு களையும் கடந்து சென்று முடிவில் வங்கக் கடலை அடைந்தான். அங்கு ஒரு படகைக் கேட்டு வாங்கி அதில் அமர்ந்து கடலில் சென்று தங்க மீனைத் தேடினான். அவன் வீசிய வலைக்குள் தங்க மீனும் சிக்கியது.

அவன் அதைப் பிடித்து எடுத்ததும் அது மனிதக் குரலில் ''என்னைக் கொல்லாதே. நான் உனக்கு என்ன கெடுதல் செய்தேன்?'' என்று கேட் டது. அவனும் ''பயப்படாதே! உன் னைக் கொல்லமாட்டேன். என் தந்தைக்கு கண்பார்வை கிடைக்கச் செய்யவே உன்னைப் பிடித்துக் கொண்டு போகிறேன்'' என்று கூறி

தன் தந்தையின் கண் பார்வை மங்கியதையும், அதை குணமாக்க சாது கூறிய வழிமுறையையும் தெரிவித்தான்.

அப்போது அந்த மீன், ''இதற்காக என்னைப் பிடித்துக் கொண்டு போக வேண்டியதில்லை. நான் என் கண்களால் கொஞ்சம் மணலை ஒற்றிக் கொடுக்கிறேன். அதை நீ உன் தந்தையின் கண்களின் மீது வைத்தால் உன் தந்தைக்குப் பார்வை கிடைத்துவிடும். எனவே, நீ கொஞ்சம் மணலை எடுத்து வா!'' என்றது.

அதுகேட்ட இளைய மகன் சற்றுத் தயங்கி னான். அப்போது அந்த மீன், ''என்னை முழுவதும் நம்பு. நான் சொல்கிறபடி செய். முதலில் நீ போய் மணலை எடுத்து வா. அதற்கு சிறப்பான சக்தியைக் கொடுக்கிறேன். நீ அதனை எடுத்துப் போய் உன் தந்தையின் கண் இமைகளின் மீது தூவு,'' என்றது.

அவனும் கையில் மணலை எடுத்து வரவே, அந்த மீனும் அதைத் தன் கண்ணில் ஒற்றிக் கொடுத்தது. பிறகு அது ''உனக்கு ஏதாவது உதவி வேண்டுமானால் என்னை நினைத்துக் கொள். நான் உடனே உன் முன் தோன்றி நீ விரும்புவதைச் செய்து கொடுப்பேன்'' என்றது.

அவனும் அந்த மணலை எடுத்துக் கொண்டு அதனிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினான். அவன் தன் ஊரை அடைந்து வீட்டிற்குப் போய்த் தன் தந்தையின் கண்களின் மீதுதான் கொண்டு வந்த மணலை வைத்தான்.

மறுநிமிடமே அவனது தந்தைக்

## நாட்டுப் புற நடனங்கள்



ஹரியானாவின் நாட்டுப்புற நடனங்கள் மனதைக் கவர்பவை, விறுவிறுப்பானவை. அவை ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்ப அமைந்தவை. தம்மல் அல்லது டஃப் எனப்படும் நடனம் குறிப்பிடத்தக்கது. இது ஹோலிப் பண்டிகைக்கு முன் பயிர் அறுவடைக்குத் தயாராக இருக்கும்போது ஆடப்படுவது. இது பரந்த வெளியில் ஆண்கள் தங்கள் பழங்கால வழக்கப்படி குர்த்தா, வேஷ்டி, தலைப்பாகை ஆகியவற்றை அணிந்து ஆடிப்பாடுவது. நடனம் தவில் அல்லது கொட்டுக்கு ஏற்ப ஆடப்படுகிறது. ஜூமர் எனப்படுவது மற்றொரு வகை நடனம். இதை பெண்கள் மட்டுமே டோலக்கின் தாளத்திற்கு ஏற்ப ஆடுகிறார்கள். ஜூமர் என்பது திருமணமான பெண்கள் தம் நெற்றியில் அணியும் ஆபரணம். எனவே அந்த நடனம் இந்தப் பெயரைப் பெற்றது. லூர், ராஸ் லீலா, குக்கா, சாத்தி, பக் என்பன மற்றவகை நடனங்கள்.



குப் பார்வை கிடைத்துவிட்டது. அதனால் அவன் மகிழ்ந்து போய் அந்த மகனைப் பாராட்டினான். இதனால் மற்ற மகன்களுக்குத் தம் தம்பியின்மீது வெறுப்பும் பொறாமையும் ஏற்பட்டது. எங்கே தம் தந்தை தம் சொத்தை எல்லாம் அவனுக்கே கொடுத்து விடுவாரோ என்ற பயமும் ஏற்பட்டது.

அந்த ஆறு சகோதர்களும் தம் தம்பிக்கு எதிராகச் சதி செய்தார்கள். அவர்கள் தம் தந்தையிடம், ''தம்பி தங்க மீனைக் கொண்டு வராமல் மணலைக் கொண்டு ஏதோ செப்பிடு வித்தை செய்து தற்காலிகமாக உங்களுக்குப் பார்வை கிடக்கச் செய்துவிட்டான். இது நிலைத்திருக்கும் என்று என்ன நிச்சயம்? சாது சொன்னபடி தங்க மீனைக் கொண்டு வந்து அதன் கண்ணால் உங்கள் கண்களை ஒற்றினால்தானே உங்களுக்கு நிலையான பார்வை கிடைக்கும்?'' என்று கூறினார்கள்.

அதைக் கேட்டுத் தந்தையும் தன் இளைய மகனிடம், ''ஆமாம். உன் சகோதரர்கள் சொல்வது சரிதான். சாது தங்க மீனைக் கொண்டு வந்து அதன் கண்ணை என் கண் மீது ஒற்றத்தான் சொன்னார். நீயோ அந்த மீன் ஏதோ சொன்னதை நம்பி மணலை எடுத்து வந்தாய். அந்த மீன் உன்னிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பிச் செல்ல அது செய்த உபாயமே அது. என் பார்வை நிலைத்திருக்க வேண்டுமென்றால் நீ போய் தங்க மீனைக் கொண்டுவா. சாது சொன்ன படி தான்



நாம் செய்ய வேண்டும்,'' என்றான்.

இளையமகனும் மறுபடியும் கிளம்பிக் காட்டு வழியே சென்றான். அங்கு ஒரு குள்ளநரி ஓடி வந்து அவனிடம், ''என்னை வேட்டைக்காரர்களிடமிருந்து காப்பாற்றுங்கள். உங்களுக்கு நீங்கள் விரும்பும்போது தோன்றி உதவுகிறேன்,'' என்று கெஞ்சிக் கதறியது. அவனும் ''சரி. நீ சட்டென இந்தக் குழியில் இறங்கு. உன்னை இலைகளால் மூடி மறைத்து விட்டு வேடர்களை வேறுபக்கமாக அனுப்பி விடுகிறேன்,'' என்றான்.

குள்ளநரியும் குழிக்குள் பதுங்கிக் கொள்ளவே, அவன் இலைகளைப் போட்டுக் குழியை மூடிவிட்டான். சற்று நேரத்திற்குப் பிறகு சில வேடர்கள் வந்தார்கள்.

அவர்கள் இளையமகனிடம்,



''இங்கே ஒரு குள்ளநரி வந்ததா?'' என்று கேட்டார்கள்.

அவனும், ''இல்லையே!'' என்று கூற, அவர்கள், ''இவன் சரியாகப் பார்த்திருக்க மாட்டான். அது இந்த வழியாகத் தான் ஓடிச் சென்றது. எங்கே போய்விட முடியும்? இங்கே தான் எங்கேயாவது பதுங்கி இருக்கும். நாம் நன்கு தேடிப் பார்ப்போம். இவனுடன் பேசிப் பொழுதை வீணாகக் கழிக்க வேண்டாம்,'' என்று கூறிக் கொண்டே வேறு வழியில் ஓடிவிட்டார்கள்.

அவர்கள் போன சற்று நேரமான பிறகே அவன் குழியிலிருந்து குள்ள நரியை வெளியே எடுத்துவிட்டான். அதுவும் அவனுக்கு நன்றி செலுத்தி ''நீ என்னை நினைத்தால் உடனே உன் முன் வந்து நிற்பேன்,'' எனக் கூறி விட்டுச் சென்றது.

அந்தக் காட்டை அடுத்து இருந்த நாட்டின் இளவரசியிடம் ஒரு விசித்திரக் கண்ணாடி இருந்தது. அவள் அந்த கண்ணாடியின் மூலம் யாரை வேண்டுமானாலும் பார்க்க முடியுமாம். எவர் தன்னை அந்த இளவரசி கண்ணாடியில் பார்க்க முடியாமல் செய்கிறானோ அவனைத் தான் மணந்து கொள்வதாக அந்த இளவரசி அறிவித்திருந்தாள். ஒருவன் அவளிடம் சவால் விட்டு விட்டுத் தோற்றுப் போனால் அவனை அவள் பிடித்து அவனது தலையை வெட்டி எறியச் சொல்லிவிடுவாள். அவள் அவ்வாறு பலரது தலைகளை வெட்டிப்போட்டதால் ஓரிடத்தில் கிடந்த மனித மண்டை ஓடுகளை அந் நாட்டிற்குச் சென்ற இளைய மகன் கண்டான்.

அவன் இளவரசியைக் கண்டு ''நீ என்னை உன் கண்ணாடியில் பார்க்க முடியாமல் செய்து காட்டுகிறேன்,'' என்றான். அரசகுமாரியும் ''நீ தோற்றால் உன் தலை போய்விடும்,'' என்று எச்சரித்தாள். அவனும் தனக்குப் பயம் இல்லை எனவே, அரச குமாரியும், ''இன்றிரவு நீ எங்கு வேண்டுமானாலும் மறைந்திரு. நான் என் கண்ணாடியில் பார்த்துக் கூறி விடுகிறேன்,'' என்றாள்.

இளைய மகனும் வெளியே வந்து குள்ளநரியை நினைக்கவே அது அவன் முன் தோன்றியது. அவன் தன்

## பார்க்கத் தக்க இடங்கள்

ஹரியானா சுற்றுலாப் பிரியர்களைக் கவரும் மாநிலம். இங்குள்ள குருக்ஷேத்திரத்திற்கு எண்ணற்ற சுற்றுலாப் பயணிகள் வந்து போகிறார்கள். பிரம்மசரோவர் என்பதும் யாவரும் விரும்பிப் பார்க்கும் இடமாகும். சூரியகிரகணத்தின்போது லட்சக் கணக்கான மக்கள் இந்தக் ஏரியில் புனிதநீராடுகிறார்கள். அச்சமயம் இந்த ஏரியில் குளித்தால், ஆயிரம் அசுவமேதயாகங்கள் செய்த புண்ணியம் கிடைக்கும் எனக் கருதுகிறார்கள். இந்த ஏரியின் கரைகளில் பல ஆலயங்கள் உள்ளன. இங்குதான் மகாபாரதப் போர் நடந்ததாம்.

பிரச்சினையை அதனிடம் கூறவே அதுவும், ''கவலைப்படாதே இதற்கு நான் வழி செய்கிறேன்'' என்று கூறித் தன் தோழர்களான குள்ளநரிகளுடன் சேர்ந்து அரண்மனைக்குள் போக ஒரு சுரங்கப் பாதை அமைத்து இளை மகனை அரசகுமாரியின் கட்டிலுக்கு அடியில் ஒளிந்திருக்கச் செய்தது.

இரவில் அரசகுமாரி தன் கட்டிலில் உட்கார்ந்து கொண்டு கண்ணாடியை எல்லாப் பக்கங்களிலும் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். எங்கும் அவன் தென்படவில்லை. விடியும்வரை பார்த்துவிட்டு அவள் சோகமாகக் கட்டிலிலிருந்து எழுந்து நின்றாள்.

அப்போது கட்டிலின் அடியில் இருந்து இளையமகன் வெளியே வந்து அவள்முன் போய் சிரித்துக் கொண்டே நின்றான். இளவரசியும் தான் தோற்றுவிட்டதாக ஒப்புக் கொண்டதோடு அவனை மணம் செய்து கொண்டாள்.

அவன் அவளோடு தன் ஊருக்குதச் சென்று தன் தந்தையைக் கண்டான். அந்த விவசாயியும் தன் மகன் ஓர் அரசகுமாரியை மணந்து கொண்டு வந்தது கண்டு மகிழ்ந்து போய் மன மார அந்த தம்பதிகளை வாழ்த்தினான். மற்ற சகோதரர்களும் அவனது உயர்நிலை கண்டு மகிழ்ந்ததுடன் அவன் மீது பொறாமைப்படுவதையும் விட்டுவிட்டனர்.

இளையமகனும் அரசகுமாரியும் எல்லோரையும் தம்மோடு தம் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அங்கு யாவரும் சுகமாக வாழ்ந்தார்கள்.





# சுருங்கக் கூறினான்!

காசிபாளையத்தில் வசிக்கும் காமாட்சி எதற்கெடுத்தாலும் மிகவும் கவலைப்படுபவள். அவளது கணவன் காசிநாதனோ எதையும் நிம்மதியாகச் செய்பவன். பேசுவதிலும் அளவாகவும் எந்த விஷயத்திலும் யோசித்தும் முடிவு எடுப்பவன்.

இவர்களுடைய ஒரே மகள் மீனா. அவளுக்கு உடனேயே கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று காமாட்சி தினமும் தன் கணவனை நச்சரித்துக் கொண்டே இருந்தாள். அவனோ யோசித்து முடிவு செய்யலாம் என்று கூறி வந்தான்.

ஒருநாள் காமாட்சி தன் உறவினர் வீட்டிற்குப் போய்விட்டுத் திரும்பி வந்ததும் தன் கணவனிடம், ''கேட்டீர்களா விஷயத்தை? நம்மூர் கோயில் அருகே உள்ள மடத்திற்கு இரண்டு நாட்களுக்கு முன் ஒரு யோகீஸ்வரர் வந்து தங்கி இருக்கிறாராம். நம் விருப்பத்தை அவரிடம் கூறியதும் அவர் 'அப்படியே நடக்கும்' என்று கூறிவிட்டால் அது நடந்துவிடுகிறதாம். ஆனால் ஒருவர் தம்முடைய ஏதேனும் ஒரு விருப்பத்தை மட்டுமே அவரிடம் தெரிவிக்க வேண்டுமாம்,'' என்றாள்.

காசிநாதனும், ''ஓ! அப்படியா? அந்த யோகீஸ்வரருக்கு நல்ல உலக ஞானம் இருக்கிறது போலத் தெரிகிறதே!'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

காமாட்சியோ, ''நான் இப்போதே போய் அவரைப் பார்த்துவிட்டு வருகிறேன்,'' என்று கூறிவிட்டு அந்த மடத்திற்குச் சென்றாள்.

யோகீஸ்வரரும் அவளைக் கண்டு ''மகளே உன் விருப்பம் என்ன?'' என்று கேட்டார். காமாட்சி திக்கு முக்காடிப் போனாள். பிறகு ஒருவாறு தன்னை சமாளித்துக் கொண்டு, ''சுவாமிகளே! நான் குடித்தனத்திற்கு வந்தபோது பண நெருக்கடியால்

- கி. அருணா -

மிகவும் கஷ்டப்பட்டேன். அதனால் என் மகளுக்கு ஒரு கோடீஸ்வரன் கணவனாகக் கிடைக்க அருள்புரியுங்கள்,'' என்று வேண்டினாள்.

அதைக் கேட்ட யோகீஸ்வரர் புன்னகை புரிந்து ''அவனிடம் கோடி ரூபாய் இருந்தால் போதுமா? அவனுக்குப் புத்திர பாக்கியம் இருக்க வேண்டாமா?'' என்றார்.

அதுகேட்டு அவள், ''அப்படியானால் புத்திர பாக்கியம் உள்ளவனே அவளுக்குக் கணவனாகக் கிடைக்க அருள்புரியுங்கள்,'' என்றாள்.

உடனே அவர், ''அவனுக்குப் புத்திர பாக்கியம் இருந்தால் போதுமா? அவன் உன் மகளை அன்புடன் நடத்த வேண்டாமா?'' என்று கேட்டார். அவளும் ''அப்படியானால் என் மகளிடம் அன்பு கொண்டவனையே அவளது கணவனாக அமைய அருள் புரியுங்கள்,'' என்றாள்.

யோகீஸ்வரரும், ''அவன் அவளிடம் அன்பு காட்டலாம். ஆனால் அவர்களது இல்வாழ்க்கை சுகமாக அமைய வேண்டாமா? உன் மகள் அவனை வெறுக்கத் தொடங்கினால் என்ன ஆவது?'' என்று கேட்டார்.

அவளும் யோசித்து ''அவளோடு நன்கு இல்வாழ்க்கை நடத்தக் கூடிய அழகனையே அவளுக்குக் கணவனாக அமைய அருள் புரியுங்கள்,'' என்றாள். அவரும், ''அந்த அழகனுக்கு ஆயுள் பலம் இல்லாவிட்டால் இறந்துவிடுவானே,'' என்றார்.

அப்போது அவள், ''சுவாமி! எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. நாளை என் கணவரைத் தங்களை தரிசிக்க அனுப்புகிறேன். அவர் வேண்டுவதைக் கொடுத்து அருள் புரியுங்கள்,'' என்று கூறிவிட்டு வீட்டிற்கு வந்தாள்.

மறுநாள் காசிநாதன் அந்த யோகீஸ்வரரைக் காணச் சென்றான். அவரைக் கண்டு விழுந்து வணங்கினான். அவரும் ''உன் விருப்பம் என்ன?'' எனக் கேட்டார். அவனும் பணிவுடன் ''என் மகளுக்கு எல்லா விதத்திலும் பொருந்தக் கூடிய ஒருவன் கணவனாக அமைய அருள் புரியுங்கள், சுவாமி!'' என்று வேண்டினான். அவரும் ''அப்படியே நடக்கும்!'' என்று கூறி ஆசீர்வதித்தார்.



# நம் இந்தியா

1. இந்தியாவின் முதல் மின்சார ரயில் கல்யாணிற்கும் தானேக்கும் இடையே ஓடியது. அதன் பெயர் இவற்றில் எது?
அ) கல்யாண் ராணி
ஆ) புனே எக்ஸ்பிரஸ்
இ) டெக்கன் க்வீன்
ஈ) விந்திய ராணி

2. ஒலிக்கும் பகுதியை நீங்கள் இவற்றில் எதில் அடைவீர்கள்?
அ) கோல்கும்பஜ் (பீஜப்பூர்)
ஆ) ஹவா மஹல் (ஜெய்ப்பூர்)
இ) அஜந்தா குகைகள் (ஔரங்காபாத்)
ஈ) தாஜ் மஹல் (ஆக்ரா)

3. 'ஃபிலிம்சிடி' இவற்றில் எங்கே உள்ளது?
அ) புதுடில்லி ஆ) கான்பூர்
இ) ஹைதராபாத் ஈ) கௌஹாத்தி



4. ஒரு இந்தியருடன் சேர்ந்து இவர் செய்த அரிய செயலை இவரது மகன் வெளிக் கொணர்ந்தார். இவர் யார்?

5. இந்தப் படத்தின் தனித்தன்மை என்ன?




6. இது இந்திய ரயில்வேயின் 150வது ஆண்டு. இதற்காக ஒன்று உருவாக்கப்பட்டது. அதற்கு இவற்றில் எந்தப் பெயர் கொடுக்கப்பட்டது?
அ) அப்பு ஆ) போலு
இ) சோட்டு ஈ) பாலு

*(விடைகள் அடுத்த மாதம்)*

## மே மாத வினாக்களின் விடைகள்

1. சிம்லா
2. கோதாவரி
3. டில்லியிலுள்ள இந்தியா கேட்டின் முன் நீர்நிலை இல்லை. கடலும் அதன் கரை மீதுள்ள கட்டடங்களும் மும்பையின் கேட் வே ஆஃப் இந்தியாவோடு சேர்ந்த காட்சி
4. கங்கை நதி மீதுள்ள ஹௌரா (ஹாவ்டா) பாலம்
5. சிம்லா
6. ஜாம்ஷெட்பூர்



# விநாயகர்

சத்துருஞ்ஜயன் எலியோடு சளுக வர்மனை தூரத்திலுள்ள சிறிய வீட்டிற்கு விரட்டி ''நீ எங்களோடு இருக்க வேண்டியவன் அல்ல. எலியை வாகனமாகக் கொண்ட விநாயகர் மீது அளவு கடந்த பக்தி கொண்டதால் அந்த எலியின் இனத்தைச் சேர்ந்தவள் தான் உனக்கு மனைவியாகத் தகுந்தவள். உன் மனைவியும் அவள் தோழிகளும் யார் கண்ணிலும் படாமல் அந்தப்புரத்தில் வளைகளுள் இருப்பார்கள்,'' எனக் கூறி ஏளனம் செய்தான்.

சளுகன் உயரிய நூல்களைப் படிக்கும்போது சளுக்கி அவனுடன் இருந்து கேட்பாள். அவன் பூஜைகள் செய்யும்போது வாயில் மலர்களைக் கவ்வி எடுத்துக் கொண்டு வந்து கொடுப்பாள். சளுகன் உண்ட பிறகே மீதமானதை அவள் உண்பாள். இப்படியாக நாட்கள் கழிந்து விநாயக சதுர்த்தியும் வந்தது.

எல்லோர் வீட்டிலும் தானியங்கள் புடைக்கப்பட்டு குவிக்கப்பட்டன. அப்போது சளுக்கி இரவோடு இரவாக எலிகளை கூப்பிட்டு தன் வீட்டையும் வெள்ளை அடித்து அவற்றைக் கொண்டு தானியத்தையும் புடைத்து வைத்தாள்.

விநாயக சதுர்த்தியன்று சளுக்கியின் அண்ணிகள் நதியில் நீராடிவிட்டுக் குடங்களில் தண்ணீர் கொண்டு வந்து கொண்டிருந்தனர். அதுகண்டு சளுகனின் முகம் கறுத்தது. அதுகண்டு சளுக்கி சட்டென ஒரு குடத்துள் புகுந்து அதை உருட்டிக் கொண்டே ஆற்றிற்குச் சென்றாள்.

அங்கு வெள்ளம் கரைபுரண்டு



ஓடியதுகண்டு சளுக்கி ''இதில் எப்படிக் குடத்தில் நீர் நிரப்ப முடியும்? அதனை எப்படித் தூக்கிச் செல்வது? குடத்தை எப்படியோ இதுவரை கொண்டு வந்துவிட்டேன்,'' என்று கவலைப்பட்டாள்.

அப்போது விநாயகர் அவள்முன் தோன்றி அந்த எலியைத் தடவிக் கொடுத்தார். எலி உருவில் இருந்த கல்யாண கிங்கிணி பழைய தேவ கன்னிகையின் உருவை அடைந்தாள். அவள் விநாயகரை வணங்கித் துதிக்க அவரும் அவளை ஆசீர்வதித்துவிட்டு மறைந்தார்.

கல்யாண கிங்கிணி தலையில் குடத்தை வைத்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்புகையில் அவளைக் கண்டவர்கள் எல்லாம், ''யார் இந்த தேவகன்னிகை? யார் வீட்டிற்குப் போகிறாள்?'' என்று அதிசயப்பட்டு பார்க்கலாயினர். கல்யாண கிங்கிணியின் அண்ணிகள் அவள் சளுகனின் வீட்டில் நுழைவது கண்டு பிரமித்துப் போனார்கள். சத்துருஞ்ஜயன் தன் செய்கைக்காகத் தலைகுனிந்து பச்சாதாபப்பட்டு சளுகனையும் அவன் மனைவியையும் அரண்மனைக்கு அழைத்துச் சென்றான்.

சளுகனின் அண்ணன்மார்கள் சத்துருஞ்ஜயனிடம் தமக்கும் ஏன் அதுமாதிரி எலியை கல்யாணம் செய்து வைத்து தேவ கன்னிகையான மனைவிகள் கிடைக்கச் செய்யவில்லை என்று சண்டை போடலானார்கள். சத்துருஞ்ஜயனோ இப்படிப் பட்டவர்களுக்காகவா நான் இந்த நாட்டை வைத்திருக்கிறேன் என எண்ணி மனம் உடைந்து தவம் செய்யக் காட்டிற்குச் சென்றுவிட்டான்.

சளுகனின் தமையன்மார்கள் ஒருவருக்கொருவர் பொறாமையால் அடித்துக் கொண்டனர். அதில் அனைவரும் மடிய சளுகவர்மனையே மக்கள் தம் மன்னனாகத் தேர்ந்து எடுத்தார்கள். அவனது ஆட்சியில் மக்கள் சுகமாக வாழ்ந்தனர்.

சளுகன் கல்யாண கிங்கிணியின் பெயரில் இன்னொரு நகரை நிர்மாணித்து அதற்கு கல்யாணி என்ற பெயரை வைத்தான். அவர்களுக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன. அவர்கள் சாளுக்கியர்கள் என அழைக்கப்பட்டார்கள். இப்படியாக சளுகவர்மன் சாளுக்கவர்மனாகி சாளுக்கிய வம்ச மன்னர்களின் மூல புருஷனானான்.

அவன் காலத்தில் வாதாபி நகரம்

பல கோயில்களோடு அழகுடன் விளங்கியது. கலைகளின் இருப்பிடமாயும் பண்டிதர்கள் வாழும் பட்டணமாயும் பூலோக சொர்க்கமாக அது திகழ்ந்தது. நகரின் பிரதான தெய்வமாக விநாயகரே வழிபடப் பட்டார். அவர் கோயில் கொண்ட ஆலயச் சிற்ப வேலைப்பாட்டைக் காணப் பல நாடுகளிலிருந்தும் அரசர்கள் முதல் அடியாள் வரை வந்தனர்.

சாளுக்கியர்களின் நாடு பரவிக் கிடந்தது. அந்த வம்ச மன்னர்கள் நாட்டின் பல பகுதிகளுக்குப் போய் பல நாடுகளை நிறுவினார்கள். வாதாபியை ஆண்டவர்கள் வாதாபி சாளுக்கியர்கள். கல்யாணியை ஆண்டவர்கள் கல்யாணி சாளுக்கியர்கள். வெங்கி நாட்டை ஆண்டவர்கள் வெங்கி சாளுக்கியர்கள். கீழச் சாளுக்கியர்கள், சௌராஷ்டிரச் சாளுக்கியர்கள் எனவும் பல சாளுக்கியர்கள் இருந்தனர். வாதாபி நகரம் பாதாமி எனவும் அழைக்கப்பட்டது.

வாதாபி கணபதி என்ற பெயர் பெற்ற விநாயகரின் புகழ் பல நாடுகளில் பரவியது. அப்போது பாவன மிசிரர் என்ற பண்டிதர் மாலை வேளைகளில் வாதாபி கணபதி ஆலய மண்டபத்தில் அமர்ந்து குழந்தைகளுக்கு விநாயகரைப் பற்றிய பல கதைகளைக் கூறி வந்தார். சிறுவர்களோடு சேர்ந்து பெரியவர்களும் அக்கதைகளைக் கேட்டு மகிழ்ந்து வந்தார்கள்.

அந்த ஆலயச் சுவர்களில் விநாயகரின் கதைகள் சித்திர வடிவில்



பொறிக்கப்பட்டிருந்தன. அதில் ஒரு விசித்திரமான படத்தை ஒரு சிறுவன் பாவனமிசிரரிடம் காட்டி அதைப் பற்றிய கதையைக் கூறும்படி வேண்டினான். அவரும் கதை கூறலானார்.

ஒரு நகரில் சத்தியசர்மனும் லோபகுப்தனும் அடுத்தடுத்த வீடுகளில் வசித்து வந்தார்கள். சத்திய சர்மன் விநாயகர் ஆலயத்துள் போய் முதலில் அவரை தரிசித்துவிட்டுப் பிறகு சிவனை தரிசிக்கச் செல்வார். லோபகுப்தனோ நேராக சிவலிங்கத்தின் முன் விழுந்து தனக்கு நிறைய லாபம் கிடைக்கச் செய்யுமாறு வேண்டி வந்தான்.

ஒருநாள் சத்தியசர்மன் சிவனை தரிசிக்கப் போனார். அப்போது லோபகுப்தனும் வந்து கொண்டிருந்தான். அப்போது நந்தி விநாயகரிடம், ''விநாயகரே! உமது பக்தன் சத்திய சர்மன் பணமுடையில் இருக்கி



றானே. உம்மிடம் எதுவும் கேட்க வில்லையா?'' எனக் கேட்டது.

அதற்கு விநாயகர், ''ஆமாம். இன்று மாலை அவனுக்கு ஆயிரம் வராகன் கிடைக்கச் செய்கிறேன்,'' என்றார். நந்தியும் விநாயகரும் பேசியதை லோபகுப்தன் கேட்டு விட்டான். உடனே அவன் சத்திய சர்மனின் வீட்டிற்குப் போய், ''சர்மா! உங்களுக்குப் பணம் தேவையாமே. ஐநூறு வராகன்கள் கொடுக்கிறேன்,'' எனக் கூறிவிட்டு வீட்டிற்குப் போய் பணம் கொண்டு வந்தான். அப்போது சத்தியசர்மா ''நேற்றுத்தானே நான் உங்கள் கடனைத் தீர்க்கவில்லை என்று வீட்டைக் காலி செய்து கொடுக்கும்படிச் சொன்னீர்களே. இப்போது கொடுக்கப் போகும் கடனையும் சேர்த்து முழுக் கடனை எப்படி என்னால் தீர்க்க முடியும்?'' என்று கேட்டான்.

அதற்கு லோபகுப்தன், ''இந்தப் பணத்தை நீ இப்போது வாங்கிக் கொள். இன்று மாலையில் உனக்குக் கிடைக்கும் பணம் முழுவதையும் கொடுத்துவிடு. நீ எனக்குக் கொடுக்க வேண்டிய முழுக் கடனும் தீர்ந்து விட்டதாக நினைத்துக் கொள் கிறேன்,'' என்றான்.

சர்மா திகைத்துப் போகவே அவரது மனைவி லோபகுப்தன் கொடுத்த பணத்தை வாங்கிக் கொண்டாள். அப்போது சர்மாவின் பெண்ணைக் கேட்க மாப்பிள்ளை வீட்டார் வந்திருந்தார்கள். அந்தக் கல்யாணமும் நிச்சயமாகியது. பிள்ளை வீட்டார் ஐநூறு வராகன்கள் பெறுமான நகைகளைப் பெண்ணுக்குப்போட வேண்டும் என்ற நிபந்தனை விதிக்க அவரும் ஒப்புக் கொண்டார்.

லோபகுப்தன் எப்போது மாலைப் பொழுது வரும், யார் பணப் பையோடு வரப் போகிறான் என்று காத்திருந்தான். வெகுநேரமாகியும் யாரும் வராததால் அவன் மனம் கலங்கி கோயிலுக்குப் போய் விநாயக விக்கிரகத்தின் துதிக்கையைப் பிடித்து இழுத்து ''என்னய்யா விநாயகா! சத்தியசர்மாவுக்கு ஆயிரம் வராகன்கள் இன்று மாலைக்குள் கிடைக்கச் செய்வதாகச் சொன்னாயே. அதை அனுப்பு!'' என்று கூறியபோதே அவனது கை விநாயக சிலையின் துதிக்கையில் சிக்கிக் கொண்டுவிட்டது. அவனால் கையை எடுக்க முடியவில்லை.

விநாயகரின் துதிக்கை அவனது

கையை மேலும் அழுத்த அவனது கை வலிக்கலாயிற்று. லோபகுப்தன் வலி பொறுக்காமல் 'ஓ'வெனக் கதறினான். அப்போது விநாயகர், "நீ எவ்வளவு விரைவில் சத்தியசர்மா வுக்கு ஆயிரம் வராகன்கள் அனுப்பி வைக்கிறாயோ அப்போதுதான் உனக்கு விடுதலை," என்றார்.

அதுகேட்டு லோபகுப்தன் தன் தலையில் அடித்துக் கொண்டு "இது அநியாயம். நான் ஏற்கனவே அவருக்கு ஐநூறு வராகன்கள் வேறு கொடுத்திருக்கிறேனே!" என்றான்.

அப்போது விநாயகர் "ஓ! ஐநூறு வராகன்களைக் கொடுத்துவிட்டு ஆயிரம் வராகன்களை அவரிடம் இருந்து தட்டிக் கொண்டு போய் விடலாம் என்று தானே திட்டம் போட்டாய்? இந்தப் பேராசைக்காக நீ இன்னும் ஐநூறு வராகன்களை சர்மா வுக்குக் கொடுத்தே தீர வேண்டும். அது மட்டுமல்ல. உனக்கு அவர் கொடுக்க வேண்டிய கடன் தீர்ந்து விட்டதாகக் கூறி அவரது மகளின் திருமணச் செலவு முழுவதையும் நீதான் ஏற்க வேண்டும். தெரிந்ததா! இப்படிச் செய்வதானால் தான் உனக்கு விடுதலை," என்றார்.

லோபகுப்தன் உடனே தன் வீட்டாருக்குத் தகவல் சொல்லி அனுப்பினான். அவர்கள் வந்ததும் ஐநூறு வராகன்களை உடனே சர்மா விடம் சேர்ப்பிக்கும்படி அவன் கூறி அவரது எல்லாக் கடனும் தீர்ந்து விட்டதாயும் அவரது மகளின் கல் யாணத்திற்கு ஆகும் செலவைத்



தானே ஏற்கப் போவதாயும் சொல்லும்படி ஆளை அனுப்பிச் சொன்னான். அதன் பிறகே அவனது கை விநாயகர் விக்கிரகத்திலிருந்து விடுபட்டது. லோபகுப்தனும் சர்மாவின் மகளின் கல்யாணத்தைத் தன் சொந்த மகளின் திருமணம் போல நடத்திக் கொடுத்து, மிகவும் நல்லவன் என்ற பெயரும் புகழும் பெற்றான்.

இந்தக் கதையைக் கேட்ட சிறுவர்களும் பெரியவர்களும் மகிழ்ந்து போனார்கள். அடுத்து இன்னொரு கதையை அவர் கூறினார்.

கல்யாணி நகரில் கலககண்டி என்பவள் தன் மருமகள் பிறந்த வீட்டிலிருந்து நிறைய நகைகள் கொண்டு வராத காரணத்தால் கொடுமைப் படுத்தி அவளை வீட்டை விட்டே துரத்திவிட்டாள். அவளது மருமகள் சௌதாமினி தன் பிறந்த வீட்டிற்குக் கிளம்பி ஒரு காட்டு வழியே போய் ஒரு விளாமரத்தடியே களைப்பால் விழுந்துவிட்டாள்.

தன் பிறந்த வீட்டிற்குப் போயும் பயனில்லையே என எண்ணிய போது அந்த மரத்திலிருந்து விளாம் பழம் விழுந்து உருண்டு அவள் பக்கம் வந்தது. அவள் அதை எடுத்த போது ஒரு யானை வேகமாக ஓடி வருவதை அவள் கண்டாள்.

சௌதாமினி சிறுவயது முதல் விநாயகரை வழிபடுபவள். எனவே அந்த யானையின் காலடியில் விழுந்து மிதிபட்டுத் தன் உயிரைப் போக்கித் தன் பிரச்சினைக்கு முடிவு காண்பது என்ற தீர்மானத்தோடு அவள் அதனருகே சென்றாள். யானையோ உடனே நின்றுவிட்டது.

அது சௌதாமினியின் கையில் இருந்த விளாம்பழத்தை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு அவளை ஆசீர்வதிப்பதுபோல துதிக்கையை உயர்த்தி விட்டு பின்னர் அவளது கைகளைப் பற்றி அவளை அழைத்துக் கொண்டு ஒரு பெரிய குகையின் பக்கம் சென்றது. அதுகண்டு சௌதாமினி ஆச்சரியப்பட்டாள். ஆனால் சற்றும் பயப்படவில்லை. யானை விநாயகர் தாம் என அவள் எண்ணி அதனோடு நடந்து சென்றாள்.





# அரசரின் தயவு!



மன்னன் மதுரசேனன் கலாரசிகன். எனவே அவனது சபையில் இசை, நடனம் என தினமும் நிகழ்ச்சிகள் நடக்கும். ஓவியம், இலக்கியம் என்பன பற்றியே பேசப்படும். மக்கள் நலனைப் பற்றி எவ்விதப் பேச்சும் இருக்காது. மன்னனும் சில சமயங்களில் மாறுவேடத்தில் நாட்டின் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த்து வருவதும் உண்டு.

ஒருமுறை அவன் தன் தலை நகரிலிருந்து மாறுவேடத்தில் சென்ற போது நகர எல்லையில் ஒதுக்குப் புறமாக இருந்த ஒரு பழைய வீட்டில் இருந்து 'கமகம'வென்று சமையல் வாசனை அவனது மூக்கைத் துளைத்தது. யாரோ எண்ணெய்க் கத்திரிக் காயைக் காரம் சேர்த்து வதக்கிக் கொண்டிருக்கிறார்கள் என அவன் தெரிந்து கொண்டான். இந்த மாதிரி சமையல் வாசனை அரண்மனையில் வந்ததே இல்லையே! அதனால் அவன் மனம் அந்த வீட்டுச் சமையலை ருசி பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டது.

அப்போது நடுராத்திரி வேளை. மன்னன் அந்த வீட்டிற்குப் போய் வாசல் கதவைத் தட்டினான். கதவைத் திறந்து கொண்டு ஒரு பெண் மணி வந்து ''யாரப்பா நீ? என்ன வேண்டும்?'' என்று கேட்டாள்.

மன்னனும், ''நான் வெளியூர்க் காரன். தலைநகருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். ஒரே பசியாக இருக்கிறது. இங்கிருந்து நல்ல சமையல் வாசனை வந்ததால் உண்ண உணவு கிடைக்குமா என்று கேட்கவே கதவைத் தட்டினேன்,'' என்று கூறினான்.

அவளும், ''ஐயோ பாவம்! வெளியூர்க்காரரான நீங்கள் இந்த அகால வேளையில் பசி என்று கூறிக்

– சுதா சுவாமி –



கொண்டு வந்திருக்கிறீர்கள். உள்ளே வந்து அமருங்கள்!'' என்றாள்.

மன்னனும் உள்ளே போய் உட்கார்ந்து கொண்டான். அப்பெண் மணி அப்போது சமையலறையைப் பார்த்து, ''இதோ பாருங்கள். யாரோ வெளியூர்க்காரர் பசி என்று இந்த அகால வேளையில் வந்திருக்கிறார். கத்திரிக்காய் வதக்கல் முடிந்ததும் நான்கு கம்பு ரொட்டிகளைச் செய்து விடுங்கள். இவர் அவற்றைக் கத்திரிக்காய் வதக்கலோடு சேர்த்துச் சாப்பிடட்டும்,'' என்றாள்.

அதன் பிறகு அவள், ''எம் அரசரின் தயவால் என் வீட்டுக்காரர்தான் சமையல் செய்கிறார்,'' எனவே மன்னன் தன் மனதில் ''இவள் கணவன் சமையல் செய்வதற்கு அரசரின் தயவு எதற்கு?'' என்று எண்ணி ஆச்சரியப் பட்டான். அப்போது அந்தப் பெண் மணி ''ரொட்டி தயாராகிவிட்டது. எம் அரசர் தயவால் உங்களுக்குக் கால் அலம்பிக் கொள்ளக்கூடத் தண்ணீர் இல்லை. அதனால் இப்படியே சாப்பிட உட்காருங்கள்,'' என்றாள்.

மன்னன் உண்பதற்கு இலை முன் உட்கார்ந்ததும் அவள் ''எம் அரசரின் தயவால் உங்களுக்கு இந்தக் கம்பு ரொட்டிகளைத் தான் விருந்தாகக் கொடுக்க முடிந்தது,'' என்றாள். மன்னனும் அந்த ரொட்டிகளைச் சாப்பிட்டுவிட்டுக் கைகழுவிக் கொண்டு வந்தான்.

அப்போது அவன் அந்தப் பெண்ணிடம், ''நீங்கள் எதைச் சொல்லும் போதும் நம் அரசர் தயவு என்று சொல்கிறீர்களே. இது ஏன்?'' என்று கேட்டான்.

அவளும் சிரித்தவாறே ''அதுவா? அதை விளக்கினால் தான் உங்களுக்குப் புரியும். இந்த நாட்டில் லட்சக்கணக்கில் சாதாரணக் குடி

மகன்கள் இருப்பதை எம் அரசர் அறியவில்லை. அவருக்கு இசை, நடனம், ஓவியம், இலக்கியம் என்பன பற்றித்தான் தெரியும். இந்தத் துறைக் கலைஞர்களுக்கு மட்டுமே ஆதரவு அளிக்கிறார். என் கணவர் நிறையப் படித்தவர். எல்லாத் தகுதி களும் பெற்றவர். ஆனால் ஒரு பயனும் இல்லை. அரசாங்கத்தில் தகுதி பெற்றவர்களுக்கு வேலைகள் கொடுக்கப்படுவது இல்லையே. இவ்வளவு படித்த என் கணவர் சமையல் வேலையைக் கற்றுக் கொண்டு சில சமயங்களில் அந்த வேலையும் செய்து பணம் சம்பாதிக் கிறார். இதெல்லாம் எம் அரசரின் தய வால் தானே நடக்கிறது?'' என்று கேட்டாள்.

மன்னன் அதைக் கேட்டு யோச னையில் ஆழ்ந்தான். அப்போது அவன், ''இதோ எம் வீட்டருகே ஓடும் ஆற்றின் நீர் வீணாகக் கடலில் போய் விழுகிறது. இந்த ஆற்றில் அணை கட்டி நீரைத் தேக்கி பாச னத்திற்கும் குடிநீருக்கும் பயன் படுத்தலாமே. இது ஏனோ எம் அரசருக்குத் தெரியவில்லை. அத னால் தான் கால் கழுவ அரசர் தய வால் தண்ணீர் கிடைப்பது இல்லை என்று கூறினேன். அரசர் மக்களுக்கு வேண்டிய உணவு, உடை, வீடு என்பனவற்றில் கவனம் செலுத்த வேண்டும். இவற்றைவிட்டு இசை, நடனம், ஓவியம் என்பனவற்றில் மட்டும் அக்கறை கொண்டால் மற்ற பொது மக்களின் கதி என்ன ஆவது? வெளியூர்க்காரர்கள் வந்தால் என்ன செய்வார்கள்? அதனால்தான் அரச ரின் தயவால் உங்களுக்குக் கம்பு ரொட்டிகளே கொடுக்க முடிந்தது என்று கூறினேன்,'' என்றான்.

அப்போது மன்னன் அவளிடம் தான் யார் என்பதைக் கூறி ''அம்மணி! தூங்கிக் கொண்டிருந்த என்னைத் தட்டி எழுப்பிவிட்டீர்கள். இனி மக்களின் நலனில் அதிக கவனம் செலுத்துகிறேன்,'' எனக் கூறிய தோடு அவளது கணவனுக்கும் அவ னது தகுதிக்கு ஏற்ப அரசாங்கத்தில் உயர் உத்தியோகத்தை அளித்தான். அரசரின் தயவு அப்போது முதல் எல்லோருக்கும் கிடைத்தது.





# ஐயம் விலகியது!

மலைகளும் காடுகளும் சூழ்ந்து அமைதி நிலவும் நல்லூர் என்ற கிராமத்தில் நாகேந்திரர் என்ற யோகி யார் ஆசிரமம் அமைத்துக் கொண்டு இருந்து வந்தார். அவர் ஒவ்வொரு பௌர்ணமியின்போது மட்டுமே தன் பக்தர்களுக்குத் தரிசனம் தந்து அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விடை அளித்து அவர்களது சந்தேகங் களைப் போக்கி வந்தார்.

ஒருமுறை ஒரு பௌர்ணமியின் போது வழக்கம் போலத் தன் பக்தர் களுக்கு தரிசனம் தந்து அவர்களது கேள்விகளுக்கு விடை அளித்தார். பக்தர்களும் அவற்றைக் கேட்டுத் திருப்தி அடைந்து அங்கிருந்து சென்றுவிட்டார்கள். ஆனால் கேச வன் என்ற ஒருவன் மட்டும் எல்லோ ரும் சென்ற பிறகும் நாகேந்திரரின் முன்னால் வெகுநேரம் வரை உட் கார்ந்திருந்தான். அவனை கவனித்த நாகேந்திரர், ''மகனே! உனக்கு என்ன பிரச்சினை?'' என்று கேட்டார். அவ னும் அவரைப் பணிவுடன் வணங்கி ''சுவாமி! என் மனதில் வெகுநாட் களாகவே உலகம் பற்றியும், உலகை யும் ஜீவராசிகளையும் படைத்த கடவுள் பற்றியும், மானிட வாழ்வு குறித்தும் பலவிதமான வினாக்கள் எழுந்து கொண்டிருக்கின்றன. அவற் றைத் தங்களிடம் கூறி என் சந்தேகத் தைப் போக்கிக் கொள்ள விரும்பு கிறேன்,'' என்றான்.

நாகேந்திரரும், ''சரி. உன் கேள்வி களை தாராளமாகக் கேள்,'' என்றார். கேசவனும், ''சுவாமி! இந்த உலகில் எல்லா ஜீவராசிகளையும் படைத்தவர் கடவுள் தானே. அவர் ஏன் அரிது அரி தான மானிடப் பிறவிகளில் பகைமை, வெறுப்பு, துவேஷம், பொறாமை எல்லாம் வைத்திருக்கிறார்? தான் படைத்தவற்றை சமநிலையில்

- கௌரிநாதன் -

வைக்காமல் ஏன் இப்படிப்பட்ட இயல்புகளை அவற்றிற்குக் கொடுத்தார்? இதுதான் எனக்குப் புரியவில்லை,'' என்றான்.

அதைக் கேட்ட நாகேந்திரர் புன்னகை புரிந்து, ''அப்பனே! உனக்குக் குழந்தை குட்டிகள் எவ்வளவு?'' என்று கேட்டார். அவனும், ''எனக்கு இரு மகன்களும் இரு மகள்களும் உள்ளனர்,'' என்றான். அவரும், ''அவர்களை நீ பாசத்துடன் அன்பாய்த்தானே வளர்த்தாய்?'' என்று கேட்டார். கேசவனும், ''அப்படித்தான் வளர்த்தேன்'' எனவே, நாகேந்திரர் ''இப்போது அவர்கள் எப்படி இருக்கிறார்கள்?'' என்று கேட்டார்.

அவனும், ''அதை ஏன் கேட்கிறீர்கள், சுவாமி! நானும் என் மனைவியும் பெரியவன் மீது அதிகப் பாசம் காட்டிவிட்டதால் அவனுக்குப் படிப்பே ஏறவில்லை. மேலும் பல கெட்ட பழக்கங்கள் வேறு அவனுக்கு வந்துவிட்டன. இளம்பருவத்திலேயே திருட்டு, கொள்ளை, கொலை என்றெல்லாம் செய்து இப்போது தலைமறைவாகி எங்கோ இருக்கிறான்,'' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே கூறினான். அதைக் கேட்ட நாகேந்திரர், ''சரி, அடுத்த மகன் எப்படி?'' என்று கேட்டார்.

கேசவனும், ''அவனும் பெரியவனாகிக் கல்யாணம் ஆகும்வரையில் எனக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தான். நகரில் வேலை பார்த்ததால் ஒரு பணக்காரரின் மகளை விரும்பி அவன் அவளை மணந்து கொண்டான். அதன் பிறகு அவன் பணம் அனுப்புவதை நிறுத்திவிட்டான். வருடத்திற்கு ஒருமுறை வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போகிறான்,'' என்றான்.



நாகேந்திரரும், ''அது சரி. உன் மகள்கள் எப்படிப்பட்டவர்கள்?'' என்று கேட்டார். அவனும், ''மூத்த மகள் அதிகம் படிக்கவில்லை. இப்போது காசநோயால் அவதிப் பட்டுக் கொண்டிருக்கிறாள்,'' என்றான். நாகேந்திரரும், ''சரி, இளைய மகள் எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டார்.

கேசவனும், ''அவள் தயவில் தான் என் குடும்பம் வாழ்கிறது. அவள் இனிமையாய்ப் பாடும் திறன் பெற்றவள். அதனால் சில சிறுமிகளுக்கு இசையில் பயிற்சி அளித்துப் பாட்டு சொல்லிக் கொடுத்துப் பணம் சம்பாதித்து வருகிறாள்,'' என்றான்.

அதைக் கேட்ட நாகேந்திரர், ''பார்த்தாயா? நீ நான்கு குழந்தைகளைப் பெற்று பாசத்துடன் எல்லோரையும் வளர்த்தாய். ஆனால் நால்வரும் நான்கு விதமாய் வளர்ந்திருப்பதைப் பார்! இதில் உனக்கு எவ்வளவு பொறுப்பு இருக்கிறதோ அதே போன்ற பொறுப்பே கோடிக் கணக்கான ஜீவராசிகளைப் படைக்கும் கடவுளுக்கும் உள்ளது. மக்களிடையே துவேஷம், வெறுப்பு, பகைமை, முதலியவற்றைப் பார்த்துக் கொண்டு கடவுள் சும்மா இருந்து விடுவது இல்லை. இந்தச் செய்கைகளுக்குத் தக்க பலனை கிடைக்கச் செய்கிறார். நல்லது செய்தால் நல்லதே கிடைக்கும். கெடுதல் செய்தால் கேடே விளையும். இந்தப் பலன்கள் உடனேயும் ஏற்படலாம். சற்றுத் தாமதித்தும் ஏற்படலாம். இதுதான் அவரது சக்தி,'' என்றார்.

இதைக் கேட்ட கேசவனின் மனம் திருப்தி அடைந்தது. செயலுக்குஏற்ற பலன் கிட்டும் என்பதைப் புரிந்து கொண்ட அவன் நாகேந்திரனின் பாதங்களில் விழுந்து வணங்கினான். நாகேந்திரரும் அவனுக்கு ஆசிகள் அளிக்கவே, அவன் எழுந்து மன நிறைவுடன் தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான்.





# புரியாத புதிர்!

ரங்கன் காட்டூரில் வாழும் திருடன். வீடுகளில் கன்னம் வைத்துப் பொருள்களைத் திருடி அவன் தன் வாழ்க்கையை நடத்தி வந்தான்.

ஒருநாள் இரவில் அவன் ஒரு வீட்டுச் சுவரில் கன்னம் வைக்கும் போது வீட்டினுள் இருவர் பேசுவது அவன் காதில் விழுந்தது. அவன் உடனே கன்னம் வைப்பதை நிறுத்தி விட்டு அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று கவனமாகக் கேட்கலானான்.

அப்போது ஓர் இளைஞன் தன் தாயாரிடம், ''என் பங்கு கட்டு சாதத்தையும் மண் பங்கு கட்டு சாதத்தையும் தனித்தனியாகக் கட்டிக் கொடு. நாளை அதிகாலையிலேயே வீட்டிலிருந்து கிளம்பினால்தான் நாளை மாலையின்போது அந்த ஊரை அடைய முடியும்,'' என்றான்.

அதைக் கேட்ட ரங்கனுக்கு என் பங்கு, மண் பங்கு என்று அந்த இளைஞன் சொன்னது புரியவில்லை. அதைத் தெரிந்து கொள்ள மறுநாள் காலையில் அந்த இளைஞனைப் பின்தொடர்ந்து செல்வது என்று அவன் தீர்மானித்து விடியும்வரை அங்கேயே ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருந்தான்.

அதிகாலையில் அந்த இளைஞனிடம் அவனது தாயார் இரு சாத மூட்டைகள் கொடுத்ததை ரங்கன் கவனித்தான். இளைஞனும் அவற்றோடு வீட்டை விட்டு கிளம்பவே ரங்கனும் அவனைப் பின்தொடர்ந்து சென்றான். இருவரும் வெகுநேரம் வரை நடந்து கொண்டே இருந்தார்கள். உச்சிவேளை வந்தது. இளைஞன் ஒரு குளத்தின் கரையிலுள்ள ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்தான். ரங்கனும் அதே மரத்தடியில் சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டான்.

இளைஞன் ரங்கனைப் பார்த்து அவனைத் தன்னருகே வரும்படிச் சொன்னான். அவன் வந்ததும் தன்

- 25 ஆண்டுகளுக்குமுன் அம்புலிமாமாவில் வந்த கதை -

தாயார் கட்டிக் கொடுத்த இரு சாத மூட்டைகளையும் அவிழ்த்து ஒரு மூட்டையைத் தன் முன்னும் மற்றதை ரங்கன் முன்பும் வைத்தான்.

அதைக் கண்டு ரங்கன் ஆச்சரியப் பட்டான். ஏனெனில் அந்த இளைஞனுக்கு அவன் அறிமுகம் ஆனவனே அல்ல. இதற்குமுன் அவன் யாருக்கும் எந்த விதமான உதவியும் செய்ததே இல்லை. இருப்பினும் முன்பின் தெரியாத ஓர் இளைஞன் தனக்கு உணவு அளித்து இப்படி உபசரிக்கிறானே!

தனக்குப் புரியாத அந்த விஷயத்தைக் கேட்க அதுவே சரியான சமயம் என்று ரங்கன் எண்ணினான். அதனால் அவனிடம், ''எனக்கு ஒரு சந்தேகம். அதைக் கேட்கட்டுமா?'' என்று கேட்டான்.

இளைஞனும் ''தாராளமாகக் கேள்!'' எனவே, ரங்கனும் ''நான் திருடிப் பிழைப்பவன். எனக்கு வேறு வழி தெரியாததால் இதை மேற்கொண்டேன். நேற்று உங்கள் வீட்டில் கன்னம் வைக்க வந்தேன். அப்போது வீட்டிற்குள் நீங்களும் உங்கள் தாயாரும் பேசியதைக் கேட்டேன். நீங்கள் என் பங்கு மண் பங்கு என்று கூறினீர்கள். அதுதான் எனக்கு விளங்கவில்லை,'' என்றான்.

அப்போது அந்த இளைஞன், ''இப்போது நான் சாப்பிடப் போவது மண் பங்கு உணவு. உனக்குக் கொடுத்தது என் பங்கு உணவு. நான் சாப்பிடும் உணவு ஒருவேளைக்குப் பிறகு இருக்காது. அது ஜீர்ணமாகிப் பிறகு மண்ணோடு கலந்துவிடும். ஆனால் நான் உனக்குக் கொடுக்கும் உணவு என் புண்ணியமாக மாறி நிலைத்து இருக்கும். பிறருக்கு உதவுவது தான் மானிடனின் கடமை. நீ திருடி அதைச் செலவு செய்துவிடுகிறாய். அதனால் பிறருக்கு என்ன பயன்? எனவே, பிறருக்கு உதவி புண்ணியத்தைச் சேர்த்துக் கொள்!'' என்றான்.

ரங்கன் அப்போது முதல் திருடுவதைவிட்டு உழைத்துச் சம்பாதித்துப் பிறருக்கு உதவி வரலானான். இளைஞன் கூறியதால் அவனது மனம் மாறிவிட்டது.



**RESERVE YOUR COPY NOW!**



# Junior
CHANDAMAMA

Do you want your children to sharpen their faculties by working on puzzles?
Come to Junior Chandamama for loads of puzzles and games.



Are you looking out for interesting new stories to be read out to the kiddies?
**Pick up [redacted] copy [redacted] Junior Chandamama, and you'll [redacted] them.**



Does your child have a taste for colouring and you want to develop the habit?
**Junior Chandamama is what you must get for your child.**






**PAGE AFTER PAGE WILL KINDLE YOUR CHILD'S IMAGINATION**

**ISSUE AFTER ISSUE, MONTH AFTER MONTH**

## SUBSCRIPTION FORM

Please enrol me as a subscriber of Junior Chandamama. I give below the required particulars:

Name : ........................................ Address : ..........................................................................

.......................................................................... PIN Code : ..............................

I am remitting the amount of Rs.100/- (Discounted rate - till June 30, 2003) for 12 [redacted] by Money Order/Demand Draft/Cheque No ............................. on ................................. Bank ........................ branch drawn in favour of Chandamama India Ltd., encashabale at Chennai (outstation cheque to include Rs.25/- towards Bank Commission).

Place : ....................

Date : ....................

Signature

அம்புலிமாமாவின் அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன்

ஓவியம் : மகேஷ்

சேனாதிபதி நரேந்திரதேவன ஆதித்தனைப் பிடிக்கும் முயற்சியில் முதலையிடம் சிக்கித் தன் இரு கால்களையும் ஒரு கையையும் இழந்தான். அப்போது சர்ப்ப தேசத்தை அடைந்த ஆதித்தன் குகைக் கோயிலுக்குள் செல்ல, அவனது வீரர்கள் ரவீந்திரதேவனையும் மந்திரவாதியையும் சிறைப்பிடித்தார்கள். மந்திரக்காரன் நாகபந்து மூன்று தலைப்பாம்பாக மாறி ஆதித்தனைத் தாக்கினான். ஆதித்தனின் தலைப்பாகையில் இருந்த இறகு கருடனாக மாறி பாம்பைக் கொத்திக் குதறி நெருப்பில் தூக்கிப் போட்டது.

மூன்று தலைப்பாம்பு நெருப்பில் விழுந்ததும் 'ஐயோ' என அலறிய நாகபந்துவின் குரல் கேட்டது.

கருடா! உன்னைப் பழிவாங்காமல் விடமாட்டேன். ஆ...!

என்ன பயங்கரச் சாவு!

பயங்கர சத்தத்தோடு குகைக்கோயில் இடிந்து சரிந்து விழுந்தது.

வாருங்கள், விலகிப் போய் விடலாம்!

தூசிப்படலத்திலிருந்து பறந்து வந்த கருடன் ஆதித்தனாக மாறவே, மலைச் சாதி தம்பதிகள் வியப்புற்று அவனை அணுகினார்கள்.

பேராபத்திலிருந்து எங்களைக் காப்பாற்றி விட்டீர்கள், ஐயா!

தாங்கள் வந்திரா விட்டால் நாங்கள் பலியாகி இருப்போம்.

உங்களுக்கு இனி எவ்வித பயமும் இல்லை. உங்கள் உறவினர்களோடு சேர்ந்து நிம்மதியாக வாழுங்கள்.

தன்னை மலை அடிவாரத்திற்குக் கொண்டு போய்விடும்படி மலைச்சாதி தம்பதிகளிடம் ஆதித்தன் கூறினான்.

ஆற்றை எளிதில் கடக்கும் இடத்திற்கு எங்களை அழைத்துச் செல்லுங்கள்.

சரி, ஐயா!

கொஞ்ச தூரத்தில் வலி பொறுக்காது கத்தும் நரேந்திரதேவனைக் கண்டார்கள். அவன் மிகவும் மனம் நொந்து போயிருந்தான்.

தந்தையே, வாருங்கள்! நாம் சந்திரபுரிக்குப் போய்விடலாம்.

வேண்டாம், ரவீந்திரா! நான் இங்கேயே மடிகிறேன். மன்னரிடம் நான் மன்னிப்புக் கோருவதாகத் தெரிவி.

மந்திரவாதி ஆதித்தனை அணுக முயல, வீரர்கள் அவனைத் தடுத்தார்கள்.

ஐயா, என்னை இங்கேயே விட்டுவிடுங்கள். இனி சந்திரபுரியில் அடி எடுத்து வைக்க மாட்டேன்.

அவரை விட்டுவிடுங்கள். ரவீந்திரதேவனை மட்டும் கூட்டி வாருங்கள்!

ஆதித்தனும் ரவீந்திர தேவனுடன் வரவே, மெய்க்காவலர்களும் வீரர்களும் நதியைக் கடக்கலானார்கள்.

எதிர்க் கரையை அடைந்ததும் நாம் வரும் செய்தியை அரண்மனைக்கு அனுப்புவோம்.


முதலமைச்சர் ஆதித்தன் வரும் செய்தி கேட்டு சந்திரபுரி மன்னரும் மக்களும் பெரும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.
ஆதித்தன் அரண்மனை வாசலை அடைந்துவிட்டான், அருணா! நான் போய் அவனை வரவேற்கிறேன்.
அப்படியே செய்யுங்கள், பிரபுவே! நான் தங்கள் இருவரின் வருகைக்காகக் காத்திருப்பேன்.
மன்னர் ஆதித்தனைக் கண்டதும் பரவசப் பட்டுக் கட்டித் தழுவிக் கொண்டார்.
அரசே! தங்களது நல்லாசியால் பத்திரமாக வந்து விட்டேன்.
ஆதித்தா! வெற்றி பெற்று வந்துள்ளாய். என் நல்வாழ்த்துக்கள். மக்கள் உன்னைக் காணத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.
அரண்மனையில் இருந்து அருணா வெளியே வந்தாள்.
ஆதித்தா! எனக்குக் குழந்தையே இல்லை. அருணாவை என் மகளாக சுவீகாரம் எடுத்துக் கொள்கிறேன். நீ அவளை மணந்து கொள்வாயா?
நான் தங்கள் கட்டளையை சிரமேற்கொள்கிறேன், அரசே!
அரண்மனைக்கு முன் கூடிய மக்கள் 'ஆதித்தன் நீடுழி வாழ்க!' என கோஷங்களை எழுப்பி மகிழ்ந்தார்கள்.
தாய்நாட்டைக் காத்த வீரரே! வருக! வருக!!
முதலமைச்சர் வாழ்க!
வீர ஆதித்தர் வெல்க!
நண்பர்களே! உங்களுக்கு எவ்வித குறையும் இல்லாமல் ஆட்சிபுரிந்து வருவேன்.
மன்னர் கூறுவதைக் கேட்போம்


மக்களிடையே அமைதி நிலவியது.
அன்பு மக்களே! ஆதித்தனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுகிறேன். நான் சுவீகாரம் எடுத்துக் கொண்ட மகள் அருணாவை அவன் மணந்து கொள்ளப் போகிறான்.


வீரர்கள் ரவீந்திரதேவனை ஒரு பக்கமாய் இழுத்துச் சென்றனர்
அட கடவுளே!


மன்னனும் அருணாவும் அரண்மனைக்குள் சென்றபின் ஆதித்தன் தன் மாளிகைக்குப் போய் தன் தந்தையின் படத்தின் முன் நின்றான்.
தந்தையே, எனக்கு ஆசிகள் அளியுங்கள்!


மகிழ்ச்சி ஆரவாரம் விண்ணை எட்டியது. அமைதி ஏற்பட்டபின் மன்னனின் பார்வை ரவீந்திரதேவனின் மீது விழுந்தது.
சேனாதிபதியின் மகன் ரவீந்திரதேவன் ஒரு தேசத்துரோகி
சேனாதிபதி முதலையிடம் சிக்கி இரு கால்களையும் கையையும் இழந்தார். தலைநகருக்கு வர அவருக்கு விருப்பம் இல்லை
அவனை நாடு கடத்தும்படி நான் கட்டளை இடுகிறேன்.
பிரபுவே! என்னை மன்னித்து கருணை காட்டுங்கள்!


ஆதித்தன் தன் தலைப்பாகையிலிருந்து இறகை எடுத்து கருட விக்கிரகத்தின் காலடியில் வைத்து வணங்கி நிற்க, அப்போது ஒரு குரல் ஒலித்தது.
ஆதித்தா! உன் தாய் நாட்டைக் காக்க மீண்டும் ஒரு முயற்சியை மேற்கொள்ள வேண்டி வரலாம். கருடன் உனக்கு ஆசிகள் அளித்து துணைபுரிவான்
முடிவுற்றது

# கேளிக்கை நேரம்

சின்ட்ரெல்லா ஒரு பூசணிக்காய் ரதத்தில் உலா வருகிறாள். சில மிருகங்கள் அவளை எட்டிப் பார்க்கின்றன. அவை யாவை?



குட்டிப் பாப்பா ஊஞ்சலாடுவதைக் கண்ணாடியில் பார்க்கிறாள். ஆனால் இந்த இரு படங்களில் எட்டு வேறுபாடுகள் உள்ளன. அவற்றைக் கண்டுபிடியுங்கள்!





குட்டிப் பாப்பா
இன்னொரு கனவு
காண்கிறாள். எலிக்
குஞ்சு அது என்ன என்று
ஆவலுடன் பார்க்கிறது.
அது அங்கே போக
வழி காட்டுங்கள்

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*






குட்டிப் பாப்பா தூங்கியவாறே அழகிய கனாக் காண்கிறாள்.
அது போல இருக்க இதற்கு வண்ணம் கொடுங்கள்.




# போட்டோ வாக்கியப் போட்டி


Soum


Mahantesh C. Muralad

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு ஆகஸ்ட் 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஏப்ரல் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**இரா. சிவகாமி,** C/o. கோ. ராஜசேகர்
142, திருச்செந்தூர் ரோடு, வடக்கு பஜார்,
பாளையங்கோட்டை – 627 002.

பரிசு பெற்றவை




படிப்பை நாடும் தாகம்
வேடிக்கை தேடும் மோகம்

**கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)**



சிண்ட்ரல்லாவைச் சுற்றிவரும் மிருகங்கள்

எட்டு வேறுபாடுகள்: குட்டிப் பாப்பாவின் காதணி, அவளது கேசக் கட்டு, மரக்கிளை, மரம் மீதுள்ள பறவையின் இறக்கைகள், பாம்பின் வால், பாம்பின் மீதுள்ள புள்ளிகள், மேகம் இல்லாதது, கீழே உள்ள பறவையின் இறகுகளின் எண்ணிக்கை

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

